ஓம்.

# சங்கரவிஜய விலாசம்.



இஃது

பவானி பிரம்மஸ்ரீ

அன்னபூர்ணியம்மா அவர்களால்

இயற்றப்பட்டு

சேலம்

ஷண்முகவிலாஸ் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.



1913.

# பிழை திருத்தம்.

| பக்கம். | பிழை. | | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | வந்த | ... | அந்த |
| 2 | வெங்கும் | ... | யெங்கும் |
| 4 | தூர்வாஸர் | ... | தூர்வாசர் |
| 3 | தஞ்சமென்றடைந்தா | ... | தஞ்சமென்று அடைந்தா |
| 5 | நின்றிரண்டில்லாமல் | ... | நின்று இரண்டில்லாமல் |
| 7 | யெல்லவருமே | ... | யெல்லவர்களுமே |
| 8 | மாயுவ்ஷமதபுர | ... | மாயுவ்ஷமபுர |
| 14 | பக்தான தோசதளை | ... | பக்தாளைத்தானே |
| 22 | பன்றோ | ... | வன்றோ |
| 25 | வென்று | ... | வொன்று |
| 25 | பாடபெட்டதா | ... | பாடபெட்டத்தில் |
| 25 | தவய | ... | தயையை |
| 28 | தானற்கிருக்கவே | ... | தானதற்கிருக்கவே |
| 30 | விரியாது | ... | விரிவாக |
| 31 | பிரியமற்றவாரவ | ... | பிரியமற்றவாரவ |
| 31 | சிறந்தாரே | ... | சிணந்தாரே |
| 32 | என்றரைவு | ... | என்றரையவு |
| 38 | குணமூற்றினல் | ... | குணமுற்றினல் |
| 40 | துதித்தார் | ... | ஸ்துதித்தார் |
| 43 | திகழ்வைப்ப | ... | திகழவைப்ப |
| 48 | யிருக்கமூர்த்தி | ... | யிருக்குமூர்த்தி |
| 51 | ச்ருதிகளுக்குகாரணம் | ... | ச்ருதிகளுக்கும்காரணம் |
| 53 | சங்கரர்பேர் | ... | சங்கரப்பேர் |
| 54 | ஒருமிக்கவர் | ... | ஒருமித்தவர் |
| 55 | ச்ரார்த்தம்செய்தபோது | ... | ச்ரார்த்தம்செய்போது |
| 56 | யிவருமமுனிவரும் | ... | யிவருமம்முனிவரும் |
| 59 | நிர்ப்பேனிவிடத்தில் | ... | நிர்ப்பேனிவ்விடத்தேயும் |
| 61 | தலைவறுமிருந்து | ... | தலைவனுமிருந்து |
| 67 | ஸ்ரீ தாரநாமத்ளதச்செப்யும் | ... | ஸ்ரீ தாரநாமத்தைசெப்பும் |
| 67 | சங்கையுடனேயவா | ... | சங்கையுடனே [illegible] |
| 68 | சென்ருன் | ... | சென்[illegible] |
| 69 | சன்யாசச்ரமத்தை | ... | சன்யாசக்ரமத்தை |
| 69 | மாயுவ்ஷமயுரவாசி | ... | மாயுவ்ஷமபுர |

| | | | |
|---|---|---|---|
| 69 | ஸுகமாயிருயென்று | ... | ஸுகமாகயிருயெற்று |
| 70 | அங்கங்கினும் | ... | அங்கங்கிலும் |
| 71 | அவமென்றாரோநொடி | ... | அவமென்றரைநொடி |
| 74 | கைலைப்போகி | ... | கைலைக்கிப்போகி |
| 77 | பூரணமாய்ஸ்திதி | ... | பூரணமாய்ஸ்துதி |
| 77 | லடைந்தார்சித்து | ... | லடைந்தர்ச் சித்து |
| 78 | அவ்விவத்திலிருந்து | ... | அவ்விடத்திலிருந்து |
| 79 | சொல்லும்கர்ம்கர்ண்டத்தில் | ... | சொல்லுங்கர்மகாண்டத்தில் |
| 79 | எட்டுவ்ருஷமாக | ... | எட்டுவருஷமாக |
| 79 | போனார்தம்பிகளும் | ... | போனார்தம்பதிகளும் |
| 82 | அபாரமாய் தவங்கள் | ... | அபாரமாம்தவங்கள் |
| 88 | செய்தஉகதன்னைக்கட்டி | ... | செய்தஉகாதன்னைக்காட்டி |
| 91 | அவனை வந்தனம்செ | ... | அவளைவந்தனம் |
| 94 | க்ஷயித்துப்போச்சு | ... | க்ஷயித்துப்போச்சுது |
| 99 | ஸத்யமாகுக | ... | ஸத்யமாகும் |
| 99 | மித்தையாகுகி | ... | மித்தையாகும் |
| 99 | வந்துநின்றுட் | ... | வந்துநின்று |
| 103 | நித்பானங்கள் | ... | நித்யானந்தங்கள் |
| 106 | நாறுநன்றென்று | ... | நன்றுநன்றென்று |
| 107 | யரென்று | ... | யாரென்று |
| 109 | தானுனதினம் | ... | தன்னுதினம் |
| 109 | பூஜைகளினிமே | ... | பூஜைகளினிமே |
| 117 | தர்வாகமேகத்தை | ... | தர்வாதமேகத்தை |
| 117 | தன்மையாமே | ... | தன்மையாலே |
| 118 | ஊக்கமில்லாத | ... | ஊகமில்லாத |
| 119 | தோறமனுபவந்தை | ... | தோனுமனுபவத்தை |
| 123 | யொன்றுயென்னினர் | ... | யொன்றுயெண்ணினர் |
| 123 | நாலுடக்ஷேத்ரமும் | ... | நாலுக்ஷேத்ரமும் |
| 125 | பகழ்தெஜுர்வேதமும் ... | ... | புகழ்தெஜுர்வேதம் |
| 125 | ஆண்டுபாலனும் செய்தார் | ... | ஆண்டுபாலனமும் செய்தார் |
| 125 | க்ஷேத்ரம் ஒப்பியேயனை | ... | க்ஷேத்ரம் ஒப்பியதனைத்தாலே |
| 126 | பாகாசப்ரம்மச்சார் | ... | ப்பகாசப்ரம்மச்சார் |
| 127 | சாமவேதமாயும் | ... | சாமவேதமதாயும் |
| 127 | மாமதற்கயிக்கியமதம் | ... | மாமதற்கயிக்கியம்தம் |
| 129 | சந்திரகளை தரித்தும் | ... | சந்திரகலைதரித்தும் |
| 132 | சங்கரபகவத்தர் | ... | சங்கரபகவத்பாதர் |
| 134 | தங்குதடையற்றுத்தானே | ... | தங்குதடையற்றுத்தானு |
| 134 | யிருப்பவர்க்கு | ... | யிருப்பவர்க்கு |
| 134 | சின்மயாகர்ரம்மாயநின்ற | ... | சின்மயாகாரம்மாய்நின்ற |

# ஓம்.

ஸ்ரீ குருப்யோநம:

# சங்கர விஜய விலாசம்.

## 1. விருத்தம்.

ஜகத்குருசரித்ரந்தன்னைச் சங்கரஹமாகத்தானே
புகன்றிடப்புவியிலுள்ள பூரணஞானியெல்லாம்
அகங்களில்மகிழ்ச்சியாக அனுக்ரஹம்செய்வாரென்று
சுகமுடன்சொல்லலானேன் சுந்தரியருளினாலே.

## சங்கராசாரியார் வணக்கம்.

## 2. விருத்தம்.

ஸர்வஸ்வதந்த்ரராயும் சதாத்மாத்வைதராயும்
நிர்விகாரானந்தத்தை நிரந்தரமடைந்தோராயும்
துர்வாதமேகத்துக்குத் தோன்றியகாற்றதாயும்
சர்வஜ்ஞானவந்த சங்கரர்பாதம்போற்றி.

தரு - இராகம்—நாதநாமக்கிரியை. 1

பல்லவி.

சங்கரனைத்துதிமனமே சர்வதாநீயும்
சங்கரனைத்துதிமனமே.

அனுபல்லவி.

சங்கரனைத்துதித்து சங்கையெல்லாமொழிந்து
எங்கும்தானாய்க்களித்து துங்கஞானம்செழித்து.(சங்கரனை)

சரணங்கள்.

1. ஆறுமதம்நிருத்தி வேறுமதம்துரந்தி
சிரதனைப்பரத்தி கூறுங்குருவைப்போற்றி.(சங்கரனை)

2. ஸர்வஸ்வதந்த்ரராயும் நிர்விகாரமதாயும்
துர்வாதவைரியாயும் சர்வாத்மரூபராயும்.(சங்கரனை)

3. தானேதானாகவெங்கும் ஞானரஸமேபொங்கும்
ஈனகுணங்கள்மங்கும் மௌனபாவமாயிங்கும்.(சங்கரனை)

4. அஷ்டாங்கமானயோக நிஷ்டைதன்னிலேயேக
வெட்டவெளியதாக துஷ்டகுணங்கள்போக.(சங்கரனை)

5. சங்கரனென்றநாமம் தங்கும்படிக்குநேமம்
இங்குவைத்ததால்காமம் மங்கும்படிக்கிக்ஷேமம். (சங்கரனை)

## சங்கராவதாரத்திற்கு ஹேதுக்கள்.

3. விருத்தம்.

துவாபரயுகத்தில் கிருஷ்ணன் தர்மங்களைஸ்தாபித்து
ஆபத்தைநீக்கிவைத்தாரவ்யுகம் கழிந்தபின்பு
பாபமாங்கலியுகத்தில் பலதுஷ்டமதங்களாலே
தாபத்தையடைந்தசேதி சாற்றிடப்படுவதிப்போ.

தரு—இராகம்—காம்போதி. 2

கண்ணிகள்.

1. சார்வாகமதத்திலே சகலருமகப்பட்டா ரந்தநாளில்
துர்வாசர்முதலான தூயமுனிவரெல்லாம் மந்தநாளில்

2. மதத்தையனுசரித்து மகத்தானஸூத்ரத்தக் கந்தநாளில்
விதம்விதமாய்பேத வியாக்யானங்கள்செய்தா ரந்தநாளில்

3. அத்தையனுசரித்து அருகதர்முதலானோ ரந்தநாளில்
மித்யாபதார்த்தங்களை மேன்மையாகநினைந்தா ரந்தநாளில்

4. பைரவன்முதலான பாஷாண்டமதத்தோரு மந்தநாளில்
கருவங்களையடைந்து களிப்புடன்திரிந்தார்க ளந்தநாளில்

5. காபாலிமுதலானோர் காமசாஸ்திரம்படித்து அந்தநாளில்
ஸோபானமறியாமல் துஷ்டத்தொழிலைச்செய்தா ரந்தநாளில்

6. சுகதர்முதலாகிய சூன்யவாதிகளெல்லா மந்தநாளில்
வெகுவிதசாஸ்திரத்தை விதம்விதமாய்க்கல்பித்தா ரந்தநாளில்

7. இப்படித்தலைகேட்டு யிருக்கும்பொழுதுஜக மந்தநாளில்
துப்பில்லாமலேதேவர் துன்பங்களடைந்திட்டா ரந்தநாளில்

8. இதற்கென்ன செய்வதென்றெல்லோரும்யோசித்தா ரந்தநாளில்
சதமென்றுப்ரம்மாவைத் தஞ்சமென்றடைந்தா ரந்தநாளில்

9. சதுர்முகனும்தன்னிலே சந்ததம்யோசித்து அந்தநாளில்
விதமறியாமலந்த விஷ்ணுவிடம்சென்று ரந்தநாளில்

10. நாரணனும்யோசித்து நன்கறியாமல்தானே யந்தநாளில்
சிருடன்கைலாசகிரியை யடைந்தார்க ளந்தநாளில்

## தேவர்கள் பரமேசுவரனைப்பிரார்த்தித்தல்.

### 4. விருத்தம்.

இப்படித்தேவரெல்லா மேகமாய்கூடிக்கொண்டு
ஒப்பில்லாக்கைலாசத்தில் உணர்வுடன்வந்துநின்று
சிற்பரவடிவமான சதாசிவமூர்த்திதன்னை
மெய்ப்படதுதிக்கலுற்றார் மேன்மையாய்த்தேவரெல்லாம்.

தரு - இராகம்-தன்யாசி. :)

பல்லவி.

தேவர்களனைவரும் சென்றுகைலாசத்தில்
சங்கரனை ஸ்துதித்தார்.

அனுபல்லவி.

பாவிகளான அந்தப் பாஷண்டர்களைவென்று
பூமிமுழுவதையும்நீர் புகழச்செய்திடுமென்று (தேவர்)

சரணங்கள்.

1. லோகாயிதா மதத்தில் லோகமுழுதும்கெட்டு
துஷ்டச்செயலைச் செய்கிறார்
ஆகாசம்பூமிஸ்வர்க்க மனைத்துமில்லை யென்றவர்
ஆரவாரித்துப் பேசுறார்
ஏகாந்தமானசுக மில்லையில்லை யென்கிறார்
சாகாஸமாய்விஷய சவுக்கியமுளதென்கிறார் (தே)

2. தத்தம்மதங்களையே சகலரும்பெரிதென்று
சாச்வதசுகம் விடுத்தார்
நித்தியமானசுக நிஷ்டையையடையாமல்
நீசத்தொழிலை யடுத்தார்
பித்தமதவாதிகள் பேரின்பத்தையொழித்தார்
சித்தம்நிலைக்காமலே சிற்றின்பத்தில்களித்தார் (தே)

3. சுகதமதத்தைச்சார்ந்த சூன்யவாதிகளெல்லாம்
சொல்லப்பொருளில்லை யென்றார்
அகத்திலுள்ளபுத்தியே அனைத்துமென் றுரைத்து
அதுவும்க்ஷணிகமே யென்றார்
இகபரமானலோக மெள்ளளவில்லையென்றார்
சகஜமேயிதனைத்தும் செய்பவனில்லையென்றார் (தே)

4. துஷ்டமதத்தினாலே துன்பத்தைமிகக்கொண்டு
ஸ்வரூபசுகத்தை யிழந்தார்
இஷ்டமாயிவ்வுடலை யென்னதகமென்றெண்ணி
யீசனடியை மறந்தார்
நஷ்டமாகியேஞான நன்மைமுழுதிகழ்ந்தார்
கஷ்டப்படுமுலகைக் கண்பாரென்றுமொழிந்தார் (தே)

## பரமேச்வரன் அபயங்கொடுத்தல்.

5 விருத்தம்

இப்படிதேவர்சொல்ல யீசனும்மகிழ்ந்துகேட்டு
அப்படியேசெய்வோமென்று ஆதரவுடனேசொல்லி
கற்பனையனைத்தும்விட்டுக் காரணஸ்வரூபந்தன்னை
மெய்ப்படத்தானுப்கண்டு மோகங்கள்மாற்றமென்பார்.

தரு—இராகம்—தன்யாசி. 4

பல்லவி.

இனியுங்கள்கலலையை யில்லாமலொழியென்று
யிசைருளாலுரைத்தார்.

அனுபல்லவி.

பனிபோலேமைலரக்கிட்ட பாமரமதமெல்லாம்
இனத்துடனையழித்து இன்பமடையசெய்வோம் (இனி)

சரனங்கள்.

1. துஷ்டகுணங்களுள்ள துர்மதவாதிபயம்
தொலைத்துச்சுகியுங்க ளென்ருர்
நிஷ்டையிலேலீங்கள் நின்றிரண்டில்லாமல்
நித்தியங்களியு மென்ருர்
வெட்டவெளியாகவே வேறற்றிருங்களென்ருர்
சிஷ்டர்களேயுங்களைச் சிறப்புடனாள்வோமென்ருர் (இனி)

2. பக்தரேயுங்களோட பாக்கியமிதுவென்று
பரமசிவனுமுன் விண்டார்
எத்தனையோயுக மிருந்துதவம்புரிந்தோர்க்
கில்லையிக் காக்ஷியென்ருர்
முக்தாவீர்களுங்கள் மோகமொழியுமென்ருர்
சத்தியமாகச்சொன்னோம் சந்தேகமில்லையென்ருர். (இனி)

3. இவ்விதமாகச்சொன்ன யிசன்மொழியைநம்பி
எல்லோரும் பதியில்சென்ருர்
திவ்யமங்களமூர்த்தி தனித்திருந்துயோசித்து
செய்வதினிமே லேதென்ருர்
அவ்வியலோபகுண மழிப்பதேகடனென்ருர்
கவ்வுமலமறுக்கக் காலமிதுவேமென்ருர். (இனி)

## தேவதைகளுக்கு கட்டளையிடுதல்.

6 விருத்தம்.

சிந்தனைசெய்துவந்த சிவனுந்தன்மைந்தனுன
ஸ்கந்தனையழைத்துச்சொல்வார் கலியுகம்தன்னிலிந்த
மந்தமாமதியினுலே மாசற்றவழிமரந்தார்
அந்தமானிடர்க்குநீயும் அனுக்ரஹிப்பாய்நல்மார்க்கம்.

தரு-இராகம்-யதுகுல காம்போதி. 5

பல்லவி.

ஸ்கந்தாநீசென்றுநல்ல கர்மமார்க்கம்போதிப்பா
யெந்தவிதமு முய்விப்பாய்.

அனுபல்லவி.

சந்ததமும்செய்திட சத்கர்மங்கள்போதித்து
பந்தவினையதான பாபங்களையழித்து.(ஸ்கந்தாநீ)

சரணங்கள்

1. காண்டத்ரயத்தில்சொன்ன கர்மங்கள்முழுதையும்
வேண்டும் வரையிலே நீயும்
ஆண்டெடுத்தூதியும் அவர்கள்செயயும்நீதியும்
காண்டர்க்குப்ரியமாயும் தூண்டத்துரையதாயும்
நீண்டக்ருதுக்களாயும் ஆண்டவன்ப்ரீதியாயும்(ஸ்கந்)

2. பின்னும்ஸூதன்வராஜப் பேருடனிந்தான்வந்து
நன்மை முழுதையும்தந்து
சொன்னவாதிகள்நைந்து தொலையும்படிக்குவெந்து
மன்னவனும்சினந்து தன்னிலேயேகினைந்து
கொன்னுவிடமுனைந்து யின்னலறத்துணிந்து(ஸ்கந்)

3. மண்டனமிச்சனென்ற மாசற்றநாமத்தோடே
அண்டம்படைத்தோன் தன்னோடே
விண்டஸ்வதர்மத்தோடே வேள்விசெய்பாரியோடே
பண்டைமறையினோடே தண்டனைவிதியோடே
கொண்டஸத்கர்மத்தோடேதொண்டர்மேல்நயவோடே(ஸ்கந்)

4. பதஞ்சலிநாமம்பெற்றுப் பணிராஜனுமெழுந்து
ஹிதம்செய்யும்படி நினைந்து
மதமனைத்துமிகழ்ந்து மாசற்றவழிதந்து
பதமுக்தியையடைந்து சதமெனப்புகழ்ந்து
இருதயமதைநினைந்து கதியதெனத்துணிந்து.(ஸ்கந்

5. லைதவகாண்டத்தையிந்த ஜகமுழுதும்ஸ்தாபித்து
உய்வதமென்று ஸ்துதித்து
லைதவலக்ஷணமொத்து செய்துத்யானத்தைப்பெற்று
ஐவகைப்புலன்செத்து கைவல்யபதமுற்று
செய்வதில்லாமல்வைத்துத் துய்யசுகமேசித்து.(ஸ்கந்)

6. ஞானகாண்டத்தையெல்லாம் கலியுகமனிதர்குத்
தானேகாட்டு வேமதற்கு
ஈனகுணம்போதற்கு யாரும்பிழைப்பதற்கு
மானமடைறயதற்கு நாளும்நீயாவதற்கு
தோஷமிறப்பதற்கு ஸ்வானுபவம்பெறற்கு(ஸ்கந்)

## தேவர்கள் அவதரித்தல்.

---

### 7 விருத்தம்.

ஈசனிவ்விதமுரைக்க வெல்லவருமேக்கேட்டு
நேசமாயிட்டதங்கள் கட்டளைப்படியேசெய்வோம்
வாசமாம்ஸ்வர்க்கம்விட்டு வையகத்திழிவோம்துஷ்டர்
நாசமாமபடிக்நீரும் நவின்றதைச்செய்வோமென்றார்.

தரு—இராகம்—புன்னாகவராளி. 6

### கண்ணிகள்.

1. ஈசனுரைக்கக்கேட்டு யெல்லோருமுடன்பட்டா ரந்தநாளில்
வாசஸ்தலத்தைவிட்டு வகையுடனேஜனித்தா ரந்தநாளில்
2. பட்டபாதராய்ஸ்கந்தன் பாரிலவதரித்தா ரந்தநாளில்
துஷ்டமதத்தையெல்லாம் சுட்டுநீறுய்ச்செய்தா ரந்தநாளில்

3. இந்தரன்ஸுதன்வனாக விக்ரமனிலேவந்தா னந்தநாளில்
சந்ததம்ஜயினைதிமங்கலை பிரவீத்தா னந்தநாளில்

4. மண்டமிச்சரனாக மாஹிஷ்மதிபுரந்தன்னி லந்தநாளில்
அண்டம்படைத்தபிர்மன் அவதாரமாகவந்தா ரந்தநாளில்

5. பதஞ்சலிமுனியாகப் பணிராஜனும்ஜனிந்தா ரந்தநாளில்
சதயானமோக்ஷமே தெய்வமென்றஸ்தாபித்தா ரந்தநாளில்

## ஜயினமதத்தை ஜயித்தல்.

### 8 விருத்தம்.

ஜனித்திட்டதேவரெல்லாம் தங்களுக்கிட்டகார்யம்
தனித்தனியாகச்செய்யத் தலைப்பட்டுபட்டபாதன்
தனிமையாய்ஸுதன்வராஜன் சபையிற்போய்நின்றபோது
வினவினசங்கைக்கெல்லாம் விடையளித்திட்டாரப்போ.

தரு—இராகம்—சுருட்டி. 7

பல்லவி.

ராஜன்கேள்விக்கி உத்திரம்ஜடிதியாகப்
பேசினான் விப்ரபுத்திரன்.

அனுபல்லவி.

தோஷமெண்ணிவேதத்தில் துஷ்டமதவாதத்தில்
நேசமாகிச்சித்தத்தில் நினைத்துக்கேட்டான்பேதத்தில்(ராஜ)

சரணங்கள்.

1. புத்தனுரைத்தவாக்யமே பெருமையென்று
ஒத்துப்பேசினான் ச்லாக்கியமே
பித்தனுரையோக்யமே பெருமையென்றபாக்யமே
புத்தியின்விகற்பமே போதும்போதும் அற்பமே(ராஜ)

2. ஜைனனும்கேட்டு யெழுந்து சீக்கிரமாக
வினவினான் மனம்விரைந்து
அனவரதமும்வேத மதிகமென்றுநினைந்து
கனமாயுரைத்தசொல்லைக் காட்டென்றவன்முனைந்து(ராஜ)

3. பட்டபாதனுமதற்குப் பார்வைதமேரி
யெட்டிவிழுந் தானிதற்கு
நஷ்டமாகாமல்நின்று நான்சொன்னவேதத்திற்கு
திட்டமாய்சாக்ஷியென்று செப்பினான்ஜனதற்கு(ராஜ)

4 அதற்குஜைனமதத்தார் ஆரவாரித்து
புதுமையிதென்று வுரைத்தார்
எதுவோமந்திரத்தாலே யிப்படிச்செய்தானென்றார்
சதிசெய்த அவன்வார்த்தை சத்யமல்லென்றுரைத்தார் ராஜ

5. ஸுதன்வராஜனுமதற்கு சூக்ஷமமாயொரு
யுக்திசெய்தா னவர்களுக்கு
அதிசயத்தைச்செய்யும் அரவொன்றைக்குடத்திற்குள்
பதனம்செய்துவைத்திட்டுப் பகர்ந்தானவர்களுக்கு(ராஜ)

6. குடத்திலுள்ளபதார்த்தத்தைக் குறிப்பாய்சொன்ன
யிடத்தில்வைப்பே னென்மனத்தை
தடுத்துப்பேசினாலுங்கள் தலையறுபடமத்தை
யெடுத்துஉரையுமென்றுயிசைத்தான்ராஜன்கருத்தை(ராஜ)

7. முன்னும்பின்னும்தோன்றாமலே முழித்தாரங்கே
சொன்னமத வாதியராலே
என்னசொல்லமுடியுமென்று யோசித்தாக்காலே
பன்னகமிருக்குதென்று பகர்ந்தார்கள்நிலைவாலே(ராஜ)

[சொன்ன]
8. பட்டபாதரேநீரென்னபகருமென்று திட்டமாய்ராஜனும்
இஷ்டமொழியைகேட்டு இக்குடத்திலேசின்ன
கிருஷ்ணன்சேஷன்மீதிலே சயனித்திருக்காரென்ன
கேள்விக்கியுத்தரம்சடிதியிலே பேசினான்விப்ரபுத்திர(ராஜ)

9. அதுகேட்டுராஜன்மனமும் அக்ஷணந்தன்னில்
பதறிவிட்டது நிதமும்
அதுகண்டாகாசவாணி அரைந்தசேதியினமும்
பதரவேண்டாம்ப்ராமணர் பகர்வதெல்லாநிஜமும்(ராஜ)

10. அதுகேட்டுராஜன்பயந்து பெதிரிலுள்ள
மதவாதிகளைச் சினந்து
அதிலிட்டமுத்திரையை யக்கணமேதுறந்து
அதிசயத்துடன்பார்த்தான் ஹரிசயனம்வியந்து (ராஜ)

11. பட்டபாதரைஸ்துதித்து பயத்துடனே
துஷ்டமதத்தை வதைத்து
சிஷ்டராசாரப்படி செய்திடவேநினைத்து
இஷ்டமாய்சத்கர்மத்தை யாரும்நடக்கவைத்து(ராஜ)

சன்மார்க்க நடத்தையைக்காட்டும்.

9 விருத்தம்.

நாஸ்திகமதத்தையெல்லாம் நன்றாகநாசம்செய்து
ஆஸ்திகமதத்தையெல்லா மங்கங்கேபரவச்செய்து
சாஸ்திரவிஹிதகர்மம் சகலரேன்செய்யச்சொன்னான்
தூர்த்தராம்சமணாதிதுலைந்தபின் ஸுகமாய்வாழ்ந்தான்.

தரு-இராகம்—ஆகிரி. 10

கண்ணிகள்.

1. பட்டபாதரேநீரும் பகர்ந்தபடியேவேதம் சத்யமென்றான்—இந்த
துஷ்டமதங்களெல்லாம்துலைந்ததே ராஜ்யாதிபத்யமென்றான்.
2. எங்கும்ஸத்கர்மம் செய்வதிஷ்டம்நமக்கதென்றான் ராஜராஜன் [அதைத்]
தங்கும்படிக்கிநீரும் செய்திடவேணுமென்றான்-ராஜ ராஜன்.
3. மேதினிமுழுதிலும்மேன்மையாய்ஸவதர்மங்கள்செய்யவேண்டும் [அதை]
நீதியுடனேநாளும் நிலைக்கும்படிக்கி நன்றாய் செய்யவேண்டும்
4. நாஸ்திகமதங்களை நம்பக்கூடாதென்றான் ராஜயத்தாரை-நல்ல
ஆஸ்திகராகவேயாகவேண்டும்மென்றான் ராஜ்யத்தாரை

5. சாதுக்களாகவேசத்கர்மம் செய்திட வேண்டுமென்றார்-அதை
சாதிக்காதவர்களைச்செய்திடுவோம் நல்ல சிக்ஷையென்றான்.

6. இப்படிசத்கர்மம்யாவரும்செய்திடச் சொன்னபின்பு-அதைத்
தப்பாமலேயிந்தஜகத்துள்ளோர்செய்திட்டார் மிகவுமன்பு

7. ஜகத்திலுள்ளோரெல்லாம் சத்கர்மமேசெய்தாரன்பினோடு-அதை
மிகக்கண்டுப்ரியமாக முடிவாச்சு நம்கார்யம் யென்பதோடு.

8. இனிநமக்கிவிடத்தில் யில்லைகார்யமென்று பட்டபாதர்-வேறே
மனந்தன்னில் நினைந்திட்டு மறுபடியிதுசெய்தார் பட்டபாதர்.

9. ஜெயினர்களிடத்திலே சிலவித்தைகளைகற்றே மாகையாலே
அவரை-யினத்துடன் சபையிலே யிப்போதுகொல்வித்தோ
[மாகையாலே]

10. குருத்ரோஹமதுவாச்சு குவலயம்தனிலிதைச் செய்தால்நா
மள் [அதை]
மருபடியுமிந்த மனிதரெல்லாம்செய்வார் மாறும் நேமம்.

11. ஆகையினால்நாமள் அக்னிப்ரவேசமும் செய்யவேண்டும்-என்ற
தாகத்தையேகொண்டு சடிதியில்புரப்பட்டான் தானேமீண்டும்

12. ப்ரபாகரர்முதலான பெருத்தசிஷ்யருடனேபட்டபாதன்-அந்த
ப்ரயாகை க்ஷேத்திரத்துக்குப் பரபரப்பாய்ப்போனான் பட்ட
[பாதன்]

13. நெஞ்சளவும்குழியை நியமமாய் தோண்டினான் பட்டபாதன்
[அதில்]
அஞ்சிக்கையில்லாமல் அப்பொழுதேசென்றான் பட்டபாதன்

14. நெல்லுமியைப்பரப்பி நாலுதிக்கிலுமதில் பட்டபாதன் தன்னைக்
கொல்லும்படிநெருப்பைக்கூடவேதான்போட்டான்பட்டபாதன்

15. உமியுடன்நெருப்பாலே யுள்ளமுடைந்துநின்றார்சிஷ்யரெல்லாம்
[அதை]
சமனம்செய்வதற்கு சக்தராகாமல்போனார் சிஷ்யரெல்லாம்

ஆசார்யர் அவதாரத்திற்கு காரணம் சொல்லும்

10 விருத்தம்.

இப்படி இருக்க யீசனும் முன்தான் சொன்ன
சொற்படி செய்வோமென்று கேரளதேசம் தன்னில்
ஒப்பில்லா காலடியென்றுரை தநிடும் க்ராமம் தன்னில்
அற்புதமாகத்தானே அவதரித்ததுவும் சொல்வாம்

தரு—இராகம்—கானடா. 11

கண்ணிகள்.



1. சோழதேசந்திலே காலடியென்றொரு
க்ராமமிருந்தததிலே
பூரணபிரமமே பூசுரர்குலத்திலே
புத்திரனாகியதிலே.

2. இதிகாசமொன்றுண்டு யீசன் திருவடியை
யிடைவிடாமலேபஜிக்கும்
மதிமானொருத்தனிந்த மண்டலமுழுதையும்
மகிழ்ச்சியுடனே பாலிக்கும்.

3. ராஜசேகரனென்ற நாமத்துடனேநல்ல
நீதியாயிருக்கும்போது
யீசனவன்கனவில் நேசத்துடனேவந்து
யிவ்விதமுரைக்குமது.

4. ஊரின்சமீபத்திலே நேருடன்நாம்வந்து
நிற்கின்றோம்லிங்கமாக
சீருடனங்குவந்து பாருமென்றருளிட்டு
சீக்கிரம்மறைவாக.

5. அரசனெழுந்திருந்து அவ்விடம்தன்னில்போகி
றாரனிருப்பதையும்கண்டான்
பரபரப்புடனொரு பெரியகோயில்கட்டினான்
பட்டணமுமொன்றமைத்தான்.

6. அதிலேப்ராமணர்களை ஹரன்பூஜைசெய்யும்படி
அநுதினமுமமைத்தான்
விதிலயதிசர்த்ததாலே வித்யாதிராஜனென்று
விப்ரனொருவன் சுகித்தான்.

7. அவருக்குசிவகுரு வென்றொருபுத்ரனன்றி
அவர்மிகக்கல்வியிலே
தவராமல்வேதத்யயனம் தான்முடிக்கப்பிறபாடு
தகப்பன்சொல்தவராமலே.

8. ஸத்குலத்திலேஒரு தகுந்தபெண்விவாகித்து
சந்ததமும் சுகித்தான்
யிக்குலம்விளங்கிட யில்லாமலொருபுத்ரன்
என்செய்வோமென்றுதபித்தான்.

9. அன்னதானங்களும் ஸ்வர்ணதானங்களும்
ஆயிரமாகவும்செய்தான்
பின்னையுமவனுக்குப் புதல்வனில்லாதகுறை
போகாமல்மனதுநொந்தான்.

10. இப்படிதாபத்தோடே யிருக்கின்றநாளையிலே
யீசனும்கருணையினால்
ஸ்வப்பனத்திலேவந்து தம்பதிகளுடனே
செப்பினாரவர்தயையால்.

11. அற்மானஆயுஸும் அழகும்கல்வியுடனே
அமைந்தொருபுத்ரன்வேண்டுமோ
கற்பழகொன்றில்லாமல் காலம்வீணாய்க்கழிக்கும்
கணக்கில்லாபுத்ரன் வேண்டுமோ.

12. என்றுயீசன்வினவ யிவர்களுமுடன்பட்டு
யிவ்விதமாகவே கேட்டார்
நன்றுவிளங்கக்கல்வி யழகுடனொருபுத்ரன்
நாங்களடைவோமென்றிட்டார்.

13. சங்கரனுமதற்கு தடையில்லாமலே நாமும்
சடிதியில்வருவோமென்றார்
இங்கிதைக்கேட்டயிந்த இருவர்களுமகிழ்ந்து
யிஷ்டமுடனவர்நின்றார்.

## சங்கரர் அவதரிக்கும் கட்டம்.

11 விருத்தம்.

சங்கரன் சாற்றிப்பின்னும் தன்னுடையம்சமாக
யிங்குவந்தவதரிக்க யெத்தனப்பட்டுயிந்த
மங்கையின்கர்ப்பந்தன்னில் மகிழ்ச்சியாய்வந்தபோது
தங்குமோமதங்களென்று சாற்றிடவேண்டுமோதான்.

தரு - இராகம்—ஆனந்தபைரவி 12

பல்லவி.

சங்கரனுமவதரித்தார்-சத்குலம்தன்னில்
சங்கரனுமவதரித்தார்-

அனுபல்லவி.

மங்கைசதிதேவியர்க்கும் மகிழும்சிவகுருவுக்கும்
துங்கஞானமுருவாய் தோன்றியதென்பதற்கும் (சங்)

சரணங்கள்.

1. மூவருமோருருவெடுத்த முதல்வனென்று
தேவசிகாமணியை யொத்த
தேவியனுசூயையுடன் சேர்ந்துமனமொருமித்த
தேவனுத்ரேயகோத்ரத்தில் ஜன்மமாயதிசயித்த (சங்)

2. வைசாகசுத்தத்துடனே வாய்த்தபஞ்சமியில்
நைசான அழகுடனே
தைஜசாம்ரூபத்துடனே சேருமார்த்ரையுடனே
கைசோரவிடாமலே கார்க்கபச்தானதோசத்லை (சங்)

3. மன்மதன்ரூபத்தைப்பழிக்கும் மாசற்ற அந்தத்
தன்மையாகவே தான்செழிக்கும்
சின்மயவடிவேயொரு சிருகுழந்தையாகநிற்கும்
தன்மையைகண்டிட அந்தக் காலடிகிராமத்தோருக்கும் (சங்)

4. சிவகுருவானதந்தையும் சதிதேவியும்
தவம்செய்த மஹிமையதும்
இவன்ரூபமாகவந்து யிருந்ததென்றுயாவரும்
கவனமாகவேபார்க்கக் காரணப்பொருள்தானும் (சங்)

5. சங்கரானுக்ரஹத்தால்வந்த சிசுவுக்கப்போ
கங்கைசந்திரனில்லை யாமிந்த
மங்களரூபத்தால்தானே மதிக்கும்சங்கரரந்த
துங்கஞானம்தன்னுடனேதோன்றினரென்பதேசொந்த(சங்)

## சங்கர நாமமிட்டு சந்தோஷித்தல்.



12. விருத்தம்.

சங்கரநாமமிட்டு சிவகுருவானதந்தை
மங்களவாசகத்தைமனதினால் ஸ்மரித்துக்கொண்டு
இங்கிவரிருக்கும்போது யிளமையில்செய்தலீலா
சங்கதிமுழுதுங்கண்டு சகலரும்மகிழ்ந்திட்டாரே.

தரு—இராகம்—தேசிகதோடி. 13

பல்லவி.

சங்கரநாமத்தையிட்டுத் தந்தைதானும்
மகிழ்ந்திட்டு சங்கரநாமத்தையிட்டு

அனுபல்லவி.

எங்கினும் நிரைந்தவஸ்து
யிங்குவந்ததுருவும் பெத்து (சங்கர)

சரணங்கள்.

1. மானும்மழுவும்மறைத்து தானுமிந்தவுருவெடுத்து
ஸ்வானுபூதியைக்கொடுத்து மௌனபாவமாகவைத்து (சங்கர)

2. பாதிப்பெண்ணுரும் மறைந்து பூதிபுண்டரத்தைதரித்து
வாதியர்களைஜயித்து சாதுவாகசேவிக்கத்து (சங்கர)

3. ஊரிலுள்ளஜனங்கள்தானும் பூரித்தேமகிழ்ந்தோர்தானும்
ஆரியரிவரேகானும் ஸாரமாயுரைத்தனருனும் (சங்கர)

## விஷ்ணுவாதிதேவதைகள் சிஷ்யராதல்.

13. விருத்தம்.

சங்கரனவதரித்த சமயத்தில் விஷ்ணுதானும்
பங்கமற்றவதரித்தார் பத்மபாதப்பேரோடே
அங்ககினில்லிப்பேரோடே அவதாரம்செய்தான்வாயு
துங்கஞானத்தால் நந்தி தோடகராகவந்தார்.

தரு—இராகம்—சங்கராபரணம். 14

பல்லவி.

தேவர்சிஷ்யராகவந்தார் சங்கரனுக்குத்
தேவர்சிஷயராகவந்தார்

அனுபல்லவி.

ஆவியுடல்பொருளை ஹரனுக்கேயர்பிக்க (தேவர்)
ஆவலுடனவர்க ளவதரித்தார்சிரக்க

சரணங்கள்

1. தேசத்தில்சிரப்பாக தெய்வம்விளங்குமந்த
பாசற்ற சோழநாட்டில் மகிழ்ந்து அநதணர்தந்த
தேஜோரூபத்துடனே சேஷசாயியேவந்த
தேசிகனிடத்திலே சிரத்தையதுமிகுந்தர் (தேவர்)

2. பத்மபாதரென்கின்ற ப்ரஸித்த நாமப்படைத்து
சுத்தப்ரம்மச்சர்யத்தைத் துரையுடனேயெடுத்து
இத்தலத்தோர்க்குக்காட்ட யிவரும்மிகக்களித்து
கர்த்தன்சங்கரனிட்ட சட்டளையைநினைத்து (தேவர்)

3. ஹஸ்தாமலகரென்ற அருமைநாமத்துடனே
சுத்தவிப்ரகுலத்தில் தோன்றியவருடனே
பித்தவேஷம்தரித்து ப்ரமைக்கடித்தானுடனே
கர்த்தன்வாயுவேயிந்தக் கபடக்கருத்துடனே (தேவர்)

4. தோடகரென்றவொரு தூயநாமம்தரித்து
நாடகமுலகென்க நந்திபுமுற்பவித்து
பூடகமாகவொரு ப்ரம்மகுலத்துதித்து
வீடடையும்மார்க்கத்தில் விரைந்துவிருப்பமுற்று (தேவர்)

5. மண்டனமிச்ரனென்ற மாசற்றபெயர்தாங்கி
யண்டப்படைத்தோனிங்கே யமைந்தான்கர்மமேயோங்கி
கொண்டாடதூர்வாசரின் க்ரூரசாபத்தைவாங்கி
மண்டலம்துதிக்கவே மகிழ்ந்துவாணியும்பொங்கி (தேவர்)

## பாலலீலையைக்கூறல்.

—•—

14 விருத்தம்.

இவரிங்கே வந்ததெல்லாமிருக்கட்டு முன்னேசொன்ன
சிவகுருமைந்தனான சங்கரர்தானுமப்போ
தவம்செய்ததந்தை தாய்கள் சந்தோஷப்படவேயிங்கே
நவநவமாகபாலலீலைகள் நடத்தினாரே.

தரு-இராகம்-பைரவி 15

பல்லவி.

சங்கரனிளமையில் செய்திட்டவிசித்திரத்தை
யிங்கேகேளுங்கள் நிஜத்தை

அனுபல்லவி.

அங்குமிங்குமாயோடி அலைபவர்போல் நடிப்பார்
சங்கையில்லாமல் சாஸ்த்ர ஜாலங்களைப்படிப்பார் (சங்கர)

சரனங்கள்.

1. தவிழுங்குழந்தைபோலே தானேவிளையாடுவார்
ஸன்மார்க்கமுழுதையும் சாதனைப்போல்காட்டுவார்
கவனத்துடனேதன்னைக் கண்டால்மோக்ஷமதென்பார்
கவனிக்காதவருக்குக் கிடையாதுமுக்தியென்பார் (சங்கர)

2. ஒன்றாம்வயதிலேயே வுரைத்தசாஸ்த்ரார்த்தத்தை
நன்றாகவேமனதில் நாட்டிவைப்பாரத்தை
பின்னபின்னமாகிய பூர்வம் ஸித்தாந்தத்தை
சின்னவயதிலேயே தெரிந்துகொண்டாரத்தை (சங்கர)

3. அஷ்டாதசபாஷையும் அப்யாஸமில்லாமலே
திட்டமாயாவருக்குத் தெரிந்துவிட்டதினாலே
அஷ்டாதசபுராண மாகிய கதையிலே
விட்டுவிடாமலொன்றும் விளங்கும் த்விதீயத்திலே (சங்கர)

4. மூன்றாம்வயது தன்னில் முழுவித்தைகளும்வந்து
வேண்டாதிருக்கஅது விளங்குவதையறிந்து
தோன்றாதபொருளிங்கே தோன்றித்தெனமகிழ்ந்து
ஆண்டவன்கிருபையென்று அவர்பிதாவும்நினைந்து (சங்கர)

5. சவுளகர்மந்தன்னைச் செய்திடவேநினைந்து
சிவகுருவானதந்தை சீக்கிரமாய்க்களித்து
பவனமலங்கரித்து ப்ராம்மணரையழைத்து
சுபமுகூர்த்தத்திலந்த சவுளகர்மமுடித்து (சங்கர)

6. நான்காம்வயதுக்குள்ளே நன்மைசெய்தபிதாவும்
நீங்குசெய்யாததாலே சேர்ந்தார்பரபதமும்
பாங்காகஅவருக்குப் பண்ணிக்கிரியைமுழுதும்
நீங்காமல்தாயைவிட்டுநிற்கும்படிமைந்தனும் (சங்கர)

## 15. உபநயனம் செய்யும் விருத்தம்.

சங்கரர் தந்தையான சிவகுருவிறந்தபின்பு
மங்கையாம் ஸதிதேவ்யம்மாள் மகனுக்கைந்தாண்டுசெல்ல
இங்குள்ள சுற்றத்தார் இவனுக்குவுபநயனத்தை
மங்களசுபதினத்தில் மகிழ்ந்திவர் செய்திட்டாரே.

தரு—இராகம்—நாதநாமகிரியை 14

பல்லவி.

உபநயனத்தையும்செய்தார் உற்ேறார்கள்கூடி
உபநயனத்தையும் செய்தார்.

அனுபல்லவி.

சுபதினத்திலேநல்ல சுத்தலக்சனம்கூடி
அபயம்தருவதான அந்ததினத்தைநாடி. (உப)

சரணங்கள்

1. சகலவாத்யம்முழங்க சந்துகளும்துலங்க
பகவானும்தானிலங்க பாக்யமிதுவேயென்க (உப)
2. வேதகோஷத்துடனே விப்ரகூட்டத்துடனே
நாதப்ரம்மத்துடனே நாட்டிவைப்பதுடனே (உப)
3. காயத்ரீமந்த்ரமான கல்மிஷமற்றத்யான
ஸோயம்பதார்த்தமான சுத்தப்ரம்மம்தானான (உப)
4. ஸகலவேதகோஷமும் சாருமனுதினமும்
அகண்டானந்தபோகமும் ஆகும்படியினமும் (உப)
5. வந்தஜனங்களுக்கு வரிசையுடனவர்க்கு
தந்ததக்ஷிணைகட்குச் சங்கையில்லையதற்கு (உப)
6. பஞ்சபக்ஷயத்துடனே பக்வபலத்துடனே
வெஞ்சினங்களுடனே வேண்டுமென்னத்துடனே (உப)
7. இஷ்டமுடனெல்லோரும் வகினபின்புநேரும்
நிஷ்டைபிதைஜெபபாரும் நேமத்துடனேயாரும் (உப)

## குருகுலவாசம் செய்தல்.



19. விருத்தம்.

பாலனுக்குபனைநத்தை பரிவுடன்செய்தமாறும்
காலம்வீணாய்ப்போகாமல் கர்க்கவேண்டியவித்தைக்கி
பாலனையழைத்துக்கொண்டு பலவித்தைகற்பஅந்த
ஆலமர்கடவுள்போன்ற அக்குருவிடம்விட்டாளே.

தரு—இராகம்—சங்கராபரணம். 15

பல்லவி.

குருகுலவாசம்செய்து குழந்தையிருக்குமந்தக்
குணங்களையுரைப்போமிந்த

அனுபல்லவி.

அருணப்ரகாசமான அப்பொழுதேயெழுந்து
கருணத்தில்செய்வதான சத்கர்மங்கள்முடிந்து (குரு)

சரணங்கள்.

1. வேதபாடமுழுதும் விளம்பஒருதரத்தில்
போதமாய் விடும்மனத்தில்
ஓதுவரிஷ்டருக்கு வுடனேயவரிடத்தில்
சாதுவென்றிடும்படிச் செய்வார்குருவிடத்தில் (குரு)

2. சாஸ்திரபாடங்களெல்லாம் சடிதியாகக்ரகித்து
பாத்ரர்க்கு அதையுரைத்து
ஆத்ரத்துடனேயதை யடிக்கடியும்போதித்து
நேத்ரமாய்குருவுக்கு நின்றார்மிகத்துதித்து (குரு)

3. சஹபாடிகளுடனே சேர்ந்துவித்தைபடிப்பார்
மிகவுமர்த்தத்தை யெடுப்பார்
பகலுமிரவுமாகப்ர பஞ்சத்தைப்பொய்யதென்பார்
அகண்டம்மாகியவஸ்து அதுதானேமெய்யதென்பார் (குரு)

4. பிக்ஷைவாங்கவொருநாள் பிள்ளைகளுடன்போகி
பிக்ஷைபோடு மென்றூர்கூகி
அக்ஷணம்தன்னிலவர் ஆகமுழுதுமேகிப்
பிக்ஷையிடுவதற்கும் பிடியன்னமில்லாதாகி (குரு)

5. நேடிப்பார்த்தவரொரு சின்னநெல்லிக்காய்தன்னை
யோடிப்போய வரின்முன்னை
வாடிப்புலர்ந்துக்கையில் லைவத்தார்காயையும்பின்னை
யீடில்லாவுமக்கீது யிட்டோம்பிக்ஷைதன்னை (குரு)

6. அதுகேட்டுஆசார்யரும் அம்மனைதன்னைவிட்டும்
பொதுஸ்தல மதனைதொட்டும்
மதியிலொருமுகூர்த்தம் மரிகிலக்ஷ்மியைக்கேட்டும்
ததியிதுக்ருபைசெய்யத் தருணம்வந்துவிடட்டும் (குரு)

7. இம்மொழிகேட்டு அந்தலக்ஷ்மியென்றுசொன்ன
அம்மையும் மனதிலுன்ன
அம்மனையோர்களுக்கு அமோகமாகவேசொர்ணம்
கம்மைநெல்லிக்கனியாய் கயவாய்ச்சொரிந்ததென்ன (குரு)

8. அதுகண்டஜனங்கட்கு ஆச்சர்யகரமாகி
புதுமையிதென்ப தாய்ப்போகி
அதிசயமெனவாரி யவர்களும்மனையேகி
இதுபாலன்செய்தசேதி யென்றூர்கள்மகத்தாகி (குரு)

## ஆசார்யர் சங்கரரைப் பார்த்துமகிழ்தல்.

---

### 17 விருத்தம்.

ஈசனுங்குருகுலத்திலிடைவிடா கோசத்தோடே
வாசமாயிருந்துகொண்டு வ்யாசங்கமுன்போல் செய்தார்
தேசிகர்மகிழ்ந்துநோக்கி ஜெகமெல்லாம் க்யாதியான
மாசில்லாவுனக்கு யின்னும் மற்றுமோர்வித்தையுண்டோ.

தரு - இராகம்—மங்களகவுசிகை 16

கண்ணிகள்.

1. மாசில்லாமணியேயுன் மஹிமைக்கிவ்வுலகத்தில்
மதித்திடவொருவஸ்து வுண்டோ அதைக்
துதித்திடயெனக்கு வாக்குண்டோ

2. துதியென்றாலதுமொரு சொல்லளவதுவாகும்
ஸ்வருபத்துக்கதுவுண்டோ பாரும் (மேவரு)
யுரைப்பதுவும் மெறட்டுப்போரும்.

3. கண்டறிந்ததுமில்லைக் கேள்விபட்டதுமில்லை
கபடமிதுவுமொருகார்யம் (மகப்)
படுமோயெவர்க்குமிந்தவீர்யம்.

4. நான்குருவானதுவும் நீர்சிஷ்யனானதுவும்
நாட்டிவழக்கமிதுபன்றோ (மோக்ஷ)
வீட்டிவிருப்பதுவுமுண்டோ

5. குருவுரைத்தமொழியை குறிப்பாய்மனதில்ஜகத்
குருவும்வைத்திருந்திட்டாரன்றே (மேலோ)
யுரையும்விட்டிருந்திட்டாரின்றே.

6. தேசிகர்பாதத்தில் தக்ஷிணமிகவைத்து
தெண்டனிட்டிவர்நின்று கொண்டு (அவர்)
விண்டமொழியைத்தாயுங்கண்டு.

ஸன்யாசத்திற்குத்தாயை உத்திரவு கேட்கும்

18 விருத்தம்.

குருவுரைத்திட்டஅந்தக் குறிப்பெல்லாம்மனதில்தானே
செரியென்றுஒப்புக்கொண்டு ஸன்யாசம்செய்யத்தாயை
மருபடிவணங்கி கேட்டார்மனமில்லை யென்றுளந்த
வுரையினைக்கேட்டபோது வொன்றுஞ்சொல்லாமற்போனர்.

தரு—இராகம்—யெதுகுலகாம்போதி

பல்லவி.

தாயேநீக்ருபை செய்வாய் சன்யாஸம்செய்திடப்
போவென்று விடைகொடுப்பாய்

அனுபல்லவி.

ஓயாதகவலையில் ஓடியலைந்துசித்தம்
மாயப்ரபஞ்சம்தன்னில் மொண்டுவிழாமல் நித்யம் (தாயே)

சரணங்கள்.

1. அகண்டஸ்வரூபம்தன்னை யனுதினமுமறிந்து
அகம்தன்னிலேயே மகிழ்ந்து
அகிலவிஷயங்களை யறியாமலேமறந்து
சுகமதாயிருந்து ஸ்வரூபத்தில்கலந்து
மகிழவரம்தந்து மனதிலேநினைந்து (தாயே)

2. பன்மையாகவேதோன்றும் ப்ரபஞ்சத்தையும்மறந்து
என்மயமாக யிருந்து
துன்மதிகளனைத்தும் தூரத்திலேபறந்து
சின்மயம்மாகவே சகலமுமறிந்து
தன்மயமாகவே சந்ததம்நினைந்து (தாயே)

3. கஷ்டப்படுத்துமிந்தக் காயப்ரமைவிடுத்து
துஷ்டகுணத்தைக் கெடுத்து
நிஷ்டையிலேயேயென்றும் நிற்கும்படியடுத்து
நஷ்டமாய்ஜகத்து நானென்பதுமத்து
வெட்டவெளிசித்து விளக்கமதைப்பெத்து (தாயே)

4. அன்னையதற்குசொல்வாள் அருமையாய்பெற்றெடுத்த
சின்னக்குழந்தையே மெத்த
சொன்னபோதிலுனக்குத் துரவரம்பூணசுத்த
கன்னல்மொழியொத்த காரணத்தையொத்த
உன்னைப்போலேபித்த ரெருவனில்லைமுத்தன் (தாயே)

## தாய் துற்பாயினைலக்கேட்டு விசனப்பாடல்.

11 விருத்தம்.

அஷ்டமவயது தன்னிலவர்சொன்னமொழியைக்கேட்டு
இஷ்டமில்லாத தாயும்யெண்ணியே கல்யாணத்தைச்
சட்டமாய்செய்யவேண்டி சகலரேனழைத்தபோது
கஷ்டமாம்வார்த்தைதன்னைக் கழறினனகஸ்த்யன்வந்து.

தரு-இராகம்-புன்னாகவராளி 18

1. ஸர்வக்ஞருந்தன்மைந்தன் சந்தேகமில்லையென்றார் மாமுனியும்
நிர்வாணசுகத்திற்கு நிலையாயருகனென்றார் மாமுனியும்

2. பூரணாயுவில்லாத புண்யனுன்மகனென்றார் மாமுனியும்
காரணத்தைமறந்து களிக்கின்றாய்நீயென்றார் மாமுனியும்

3. அதுகேட்டுமாதாவும் ஹா ஹா வென்றுஅழுதா ளந்தநேரம்
இதுகண்டுஅகஸ்த்தியரும் மிவிடம்விட்டோடினா ரந்தநேரம்

4. மனம்தன்னில்விசனமாய் மருகியழுதுகொண்டு அந்தமாதும்
தனயனுக்கிவ்விதத் தன்மைவந்ததேயென்று அந்தமாதும்[தானும்

5. இப்படியழுதுகொண்டிருக்கும் பொழுதொருநாள் மைந்தர்
தப்பில்லாமாதாவே யுனக்கென்னதுயரென்றார் மைந்தர்தானும்

6. புத்ரனிறந்துசோகப் படுவையென்றுரைத்திட்டார்மாமுனியும்
அத்தைநினைந்தால் துக்க மாகுதுயெனக்கென்றா ளந்தத்தாயும்

7 அதுகேட்டுமைந்தனும் மன்னைவிசனம்விடு யென்றுசொன்னார்
ததியிதுஸன்யாசம் செய்யக்காலம்தானே யென்றுசொன்னார்

8. மாதாசம்மதிக்காமல் மனம்நொந்துதுக்கித்தா ளந்தநாளில்
நீதானவிளைபோனால் தானேவருகுமென்றா ரந்தநாளில்

## முதலைகாலிற்பற்றிக்கொள்ள ஸன்யாசம் செய்துக்கொள்ளுதம்.

விருத்தம். 20

மாதாவின்விதமுரைக்க மனதிலேவைத்துத்தானும்
பாதாரவிந்தம்தன்னில் பரிவுடன்பணிந்துபின்னும்
மாதாவின்விடையைநோக்கி மகிழ்ந்திவரிருக்கும்போது
சூதாகஇவர்கால்தன்னைத்தொடாந்தது மகரிதன்னில்.

தரு-இராகம்-உசேனி. 19

கண்ணிகள்.

1. ஊரிலிருக்கும் சூர்ணப்பிழைதன்னில் மாதாவுடனே
ஆரியர்வந்துஅமிழ்ந்திஞர்தண்ணில்

2. தண்ணலேயொரு தருந்தமுதலையாமது காலைப்பிடித்து
எண்ணியபடியிவரையிழுத்ததாம்

3. அன்னையேயென்று அவருங்கூப்பிட்டு ஆரவாரத்துடன்
என்னவோவென்று காலையிழுத்திட்டு

4. முன்னும்பின்னும்போகாமலிழுக்குது மாதாவேயினிமேல்
என்னசெய்யலாமென்றவர் தடுத்து

5. அதுகேட்டுமவர்தாயு மவிடத்தில் ஹா ஹாவென்பதுடன்
பதை பதைத்திட்டாள் பாடுபட்டதில்

6. தாயேயெனக்குச்சன்யாசம்செய்யத்தந்தாலனுக்ஞையை
மாயமாயிதுபோகுது மெய்யாய்

7. அப்படியந்தமுதலைசொல்லுது அன்னையேயெனக்குத்
தப்பமுடியாமல் கொல்லுது

8. என்றுமைந்தனு மிசைத்ததைக்கேட்டு மாதாவும்மனதில்
ஒன்றுநினைந்துவுரைத்திட்டாள் விட்டு

9. சன்மஸியெயுன்கருத்தின்படிசெய்வா யதினாலெயெனக்கு
புண்யமென்பதும் பொதுவாகத் தெளிவாம்

10. நானிறந்தபின்னவின்றகர்மத்தை நீயாகவேசெய்ய
வேணுமெனக்கு விடைகொடுத்தத்தை

11. பாலித்திடுலையானால் பாக்யமே யாகும்மெனக்கது
மூலமாகவே முடியும் ஜன்மமே

12 அப்படிச்சொன்ன அன்னைவார்த்தையை யடைவாகவினைவி
தப்புவதில்லையென்றவர்தயை

13. தாயுமறிந்துசன்யாசம்செய்யத் தபமேவாடேவிடலை
வாலைத்துறந்துவிளம்பினால்மெய்யாய்

14. ஜலத்திலேயின்படியேஅவர்செய்தார் ஸன்யாசத்தையப்போ
பெலத்தையும்விட்டுப்போச்சுதாமுய்ய

15. அவர்களைமேரிஅனுஷ்டானம்பண்ணி யன்னையிடத்திலே
தவராமல்விடைவாங்கிவெயெண்ணி

16. அம்மாவுன்னுடையாபத்காலத்தில் என்னைநினைத்திடு
யிம்மொழியிதுஸத்யம் ஸத்யத்தில்.

## குருவையடையவேண்டியவரின் வரலாரை கூறல்.

### விருத்தம். 21

உத்தரவளிக்கத்தாயும் உத்தமகுருவைத்தேடி
உத்தரதிசையைநோக்கி யொருமித்தமனதினோடே
மெத்தவும்விரைந்துசென்றுமே தினிமுழுதும் சுற்றிக்
கர்த்தனைக்காண்பதற்குக்காரணமுரைக்கலாகும்.

தரு-இராகம்-ஆனந்தபைரவி. 20

### கண்ணிகள்.

1. க்ஷீரகாரம்தன்னிலே நாரணர்
சேஷனும் சையைமேலே
பூரணானந்தத்தாலே யொருதினம்
புகழ்ந்துதானிருக்குங்காலே

2. ஸ்வாமியைத்தாங்கும்சேஷன்
அப்பொழுதுதாங்கமாட்டாமலீசன்
நாமங்கள் துதித்துத் நாசன்நன்றாக
நாரணிடத்தில்பேசன்

3. பூமியையுந்தாங்கும்நானும்
யிப்பொழுதுபாரம்தாங்காமை நானும்
ஸ்வாமிநீர்கூறவேணும் தயவாக
சந்தகம் மறியநானும்

4. என்றுசேஷன்கேழ்க்கவே
(யப்பொழுது) யீசனும்மிகப்பார்க்கவே
நன்றுநன்றதுயேர்க்கவே (நாதன்செய்)
நடனம்நம்மில்நிர்க்கவே

5. என்னென்றுசொல்வேனிப்போ
(யீசன்செய்) ஏகாந்தநடச்சிரப்போ
சொன்னாலுமதுவுந்தப்போ
(அல்லாமல்) ஜோதிர்மயமாவதிப்போ.

6. ஆனந்தநடனமான (அதுதானே)
யாவர்க்குமரிதத்யான
ஞானத்தாலடையும்மௌன
(மதுகொண்டு) அத்புதகாக்ஷிநடனம்

7. நாதப்ரம்மஜகத்து யென்பதை
நாமன்காணவும்நினைத்து
வேதத்திலுரைக்கும்வஸ்து
(அதுதானே) வரும் கையிலுடுக்கெடுத்து

௮. ஜோதிர்ம்மயம்நாமமென்று
(சொல்வதற்கு) ஸ்வயம்ஜோதியானதொன்று
சூதினால்நெருப்பையின்று
(கையிலே) சொகுசாகவெடுத்துநின்று

9. மனமென்றமானைவென்று (எல்லோரும்)
மௌனமாயிருக்கவென்று
கனமாகக்கையிலொன்று
(மானையும்) களிப்பாகபிடித்துக்கொண்டு

10. மதமென்றபுலியைக்கொன்று
(மகிழ்வே) மன்மதன்தன்னைவென்று
சதமோக்ஷமென்றுகொண்டு
(சதா அரையில்) சர்மத்தைகட்டிநின்று

11. ஜனனமரணங்கொடுக்கும்
(அக்ஞானக்) கெடுதலைக்காட்டுவதற்கும்
அனவரதம்காலில்மெதிக்கும்
முயலவனை யதுக்காகக்காட்டிநிற்கும்

12. ஜாக்ராதியவஸ்தைமூன்றின்
(சாக்ஷியாய்) ஞானற்கிருக்கவேண்டின்
சீக்கிரமாய்தயவும்வேண்டின்
(தன்னுடைய) சீர்பாதம்தூக்கியொன்றின்

13. இவ்விதம்நடித்தயீசன் தன்னையும்
யேகாந்தமாகநேசன்
செவ்வையாய்வைத்துமோசம்
(போகாமல்) சுகமாகயிருந்துவாசம்

14. இநிஜலென்தேகமுனக்கு (யிப்போது)
யெடுக்கமுடியாமலிருக்கும்
அதிககனமாககனக்கும் (அம்மனுடன்)
அய்யன்தரிசனமதாக்கும்

15. ஸ்ரீவிஷ்ணுயிதுவுரைக்க (சேஷனும்)
சின்மயானந்தமிக்க
பாவனைசெய்யத்தக்க பாக்யத்தை
பண்ணிநீரனுக்ரகிக்க

ஆதிசேஷனைப்பதஞ்சலியாகச்சொல்லும்.

விருத்தம்.

ஆதிசேஷனும்விரைந்து அவரடிதன்னில்தாழ்ந்து
ஜோதியாகியஸ்வரூபம்தோன்றவே சொல்லுமென்று
ஆதரவுடனேகேட்ட ஆதிசேஷனையும்பார்த்து
ஓதுவருண்மையாகவுணர்ந்திடும் வகையையெல்லாம்.

தரு-இராகம்-காம்போதி. 21

பல்லவி.

பணிராஜனேநீசென்று பதஞ்சலிரூபங்கொண்டு
பணிந்திடுவாய்மிக்க கண்டு.

அனுபல்லவி.

அணியாகிஹாரனுக்கும் அனுதினமுமிருக்கும்
இணையில்லாதவுனக்கும் யென்மொழியேசிரக்கும் (பணிராஜ)

சரணங்கள்

1. தில்லைவனத்தில்சென்று திவ்யநடனங்கண்டு
அல்லல்வினையைக்கொண்று ஆனந்தமாகநின்று
சொல்லும்பொருளும்வென்று ஜோதிஸ்வரூபத்தன்று
பொல்லாதமனமொன்று போகாததுவேயின்று (பணிராஜ)

2. திருநடனம்செரியாய் தெரிந்திடுமோஅறிய
ஒருவருமேநிறைய வுணர்ந்திடுமோகுறியாய்
அருமை அருமையய்யா அத்புதமாகுமுய்யத்
தருமமிதுவேமெய்யாய் சொன்னதனைத்தும்துய்யப்(பணிராஜ)

3. யோகமார்க்கமுணர்ந்து வுள்ளபடிநினைந்து
ஊகமாகத்தெளிந்து வுரைக்கும்ஸூத்ரம்புனைந்து
ஏகரஸம்நிரைந்து யெங்குமதாய்சிரந்து
போகபோக்யமிறந்து போகுமனம்பரந்து (பணிராஜ)

4. ஆனும்பெண்ணுமாய்சேர்ந்த அக்ஷரங்களும்சேர்ந்து
பாணினியாலேயோர்ந்த பலவிதஸூத்ரமிந்த
கோலாலதுநிமிர்ந்தக் குறிகளநுவும்சொந்த
மானபாஷியம்தந்த அன்றேயிவ்விடம்வந்த (பணிராஜ)



## பதஞ்சலியாவிர்பவித்துச் செய்யும் கார்யம்.

21 விருத்தம்.

நாரணனுரைக்கேட்டு நாகமுமவிடம்விட்டு
தாரணிதன்னில்வந்துதில்லையாம் வனமும்சேர்ந்து
ஆரணப்பொருள்வந்திங்கே யாடியநடனங்கண்டு
பூரணமாகபாஷ்யம்போது மட்டியற்றிட்டாரே.

தரு-இராகம்-முகாரி. 22

கண்ணிகள்.

1. ஆனந்தநடனத்தைக்கண்டாரே — முனி
தானந்தமயமாகநின்றாரே

2. வேண்டியவரைபார்த்துக்கொண்டாரே — முனி
ஆண்டவன்நடனத்தைக்கண்டாரே

3. யோகசூத்ரத்தையெல்லாம்செய்தாரே — முனி
யேகசித்தத்தில்நன்றாயுய்த்தாரே

4. பாணினிசூத்ரத்துக்குப்பரிவாகத் — தானே
வேணபாஷ்யம்செய்தாரே விரியாது

5. அதைவெளிப்படுத்தற்குத்தானாக — முனி
விதம்விதமாய்நினைந்தார்வினைக

6. ஆயிரம்சிஷ்யர்சேர்த்தாரக்காலம் — முனி
ஓயொழிவற்றுச்சொன்னாரக்காலம்

7. திரையொன்றயேற்படுத்தியக்காலம் — முனி
திரையிக்குள்தானிரந்தாரக்காலம்

8. திரையைத்தூக்துபார்த்தாலெல்லோரும் எனக்கு
பிரியமற்றவார்வீரெல்லோரும்

9. ஒருசமயத்திலந்தமுனிநாதர் பார்க்கும்
மறைந்துபாடம்சொன்னாரேமுனிநாதர்

10. இப்படிவெகுகாலம்முனிநாதர் தாமும்
தப்பாயல்பாடம்சொன்னார்முனிநாதர்

11. இதுமிகஆச்சரியமென்றார்கள் சிஷ்யர்
புதுமைபுதுமையிதுவென்றார்கள்

12. ஒருசமயம்தன்னிலேயெல்லோரும் மந்தத்
திரையைத்தூக்துபார்த்தாரெல்லோரும்

13. பாம்பின்முகத்திலின்றும்யெல்லோரும் மப்போ
சாம்பலாகயெரிந்தாரெல்லோரும்

14. அவரிலொருவன்வந்துஅக்காலம் நானும்
தவரியிருந்தேனென்றானக்காலம்

15. அதுகேட்டுமாமுனியும்சிறந்தாரே யின்னும்
மதிகெட்டுமாமுனியும்முனைந்தாரே

16. ப்ரம்மரக்ஷஸாய்ப்போவாயென்றாரே அவன்
மறுபடியும்வணங்கிக்கொண்டாரே

17. மன்னித்துக்கொள்ளுமென்றார்குருநாதா நீரும்
சொன்னதலைதத்தீருமென்றான்முனிநாதா

18. அதற்குஅவரிரங்கிப்போதே சொன்ன
விதத்தையனுபவித்துப்போதே

19. பச்சென்றமொழிக்கர்த்தம்கேழ்ப்பாயே நீயும்
இச்சைப்படிசொல்லாட்டால்தின்பாயே

20. பக்வமென்றுவுரைத்தாலப்போதே நீடியும்
தக்கவனென்றுரைப்பயப்போதே

21. உன்னுடையசாபம்விட்டுஅப்போதே நீயும்
தன்னுடையவுருவாவாயப்போதே.

## யக்ஷனின்சாபம் நீங்கல்.

விருத்தம். 24

முனிவிட்டசாபந்தாலே முடிவுள்ளயக்ஷஸ்வா நிக்
தனியாகவொருவ்ருக்ஷத்தில் தங்கிடஅங்கேவந்த
மனிதரைவினவிக்கொண்டு மருமொழிகிடையாத்தாலே
மனதினில்விசனங்கொள்ள மருமொழிகிடைத்ததப்போ.

தரு—இராகம்—தோடி 23

கண்ணிகள்.

1. வ்ருக்ஷத்திலொருயக்ஷஸ்ஸுநின்று
விடையளியென்றுகேழ்க்குமாம்
அக்ஷணம்விடையளிக்காதோர்களை
யப்பவேவாரித்தின்னுமாம்.

2. வெகுதினமிந்தக்கேள்விகள்கேட்டு
விடையில்லாதொருநாளிலே
வகையுடனொருப்ராம்மணன்வந்து
விடைதருவேனின்னாளிலே.

3. என்றிவன்சொல்லக்கேட்டு
யக்ஷஸ்ஸும்பின்பமாகியகேள்வியை
அன்றுகேட்டதுஅதுவெதுவென்றால்
ஆகும்பச்செனறகேள்வியை

4. இக்கேள்விவிடைஎன்னென்று
கேழ்க்கயிந்தபிராம்மணனறிந்ததை
பச்வமென்றதர்கற்த்தமாமென்று
பண்டிதருரைப்பாரத்தை

5. என்றுரைவுமெழுந்துயக்ஷஸ்ஸும்
என்னிடம்சப்தபாஷ்யத்தை
யின்றுகேளென்றுசொன்னத்தைக்கேட்டு
நன்றென்றுனதுசொன்னத்தை

6. யாருநீயென்றுகேழ்க்கயக்ஷஸன்
அந்தணன்விடையோதினான்
பாரினிலொருஉஜ்ஜினியென்ற
பட்டணமென்றுகூறினான்

7. சந்த்ரகுப்தனென்றெனக்கொருநாமம்
சாற்றிடுவார்களுலகத்தில்
தந்த்ரமறியசப்தசாஸ்த்ரத்தின்
சடிதியாய்வந்தேனிவிடத்தில்

8. இங்குநீவந்தசேதியென்னென்று
யக்ஷஸனும்பார்த்துகேழ்க்கவே
பங்கமில்லாமல்வ்யாகரணத்தின்
பாஷ்யத்தைநன்றாய்கேழ்க்கவே

9. வந்தேனென்றுவிப்ரனும்சொல்ல
வரிசையாகவேயக்ஷஸனும்
தந்தேனானிதோர்பாஷ்யமுனக்குச்
செரியாககேட்டுச்சென்றிடும்

10. என்றுஅறைந்துயிவனுக்குபாஷ்யம்
யெடுத்துயெடுத்துஉரைத்தது
அன்றுமுதலாமாதம்ரண்டிமேல
யழகுடனதை முடித்தது

11. அந்தஅர்த்தத்தையாலிலையிலே
அவன்நகத்தாலெழுதினான்
வந்தகாரியம்முடிந்தவுடனே
யிந்துடல்விட்டுச்சென்றதாம்

12. மருபடிமஹாபாஷ்யத்தையெல்லா
மடித்துத்துணியில்கட்டியே
ஒருநதியிலேயருந்திஜலத்தை
யுறங்கினான்வைத்துமூட்டையை

13. கரையிலிருந்த ஆடுகள்வந்து
கிட்டயிருந்தயிலைகளை
சிறிதுகள் தின்றுசிதறிப்போகவே
தெளிந்துயெழுந்தாளிலைகளை

14. பார்க்கும்பொழுதுபாஷ்பம்சிதறிப்
பாரில்கிடப்பதறிந்தவன்
சேர்க்கும்வகையைச்சிந்தையுடனே
சிதறினதையும்விட்டிவர்

15. கூடியமட்டும்சேர்த்துக்கொண்டதைக்
கட்டியெடுத்துத்தலையிமேல
நாடியேயூரைப்போகும்பொழுது
நால்வர்கன்னியர்வழியிலே.

16. எங்களைமணம்புரிவீர்நீரென்று
யெல்லவர்களும்ப்ரார்த்தித்தார்
அங்கேயவரும்மனதுடன்பட்டு
மங்கையர்களைவேள்வித்தார்.

17. வருசிமுதலானநால்வர்கள்
வரிசையாகவேதோன்றினர்
அருமைமைந்தருக்குஅப்பாஷ்பம்
சொல்லியவரும்துரவுக்கேகினர்.

18. சுகப்ரமத்தோமேடசிஷ்யராகிய
தூயமுனியைநாடினர்
அகமகிழ்ந்தந்தகவுடபாதரின்
அடிமலரிமேலவணங்கினர்.

19. க்ரமமாகசன்னியாசமவரும்
க்ருபையினாலேயேபண்ணினர்
மமதையகந்தையிழந்துமோக்ஷத்தை
மயங்காமலவர்நண்ணினர்.

20. தேசிகனோடே சேவையைச்செய்து
சிலநாளங்கே யிருந்திட்டார்
நேசமாகவேயவரிடத்திலே
நீங்கவும் விடைபெத்திட்டார்.

21. நினைத்திட்டாரவர்நரநாராயணாள்
நிகழும்பதரிவனந்தன்னில்
அனவரதமும்வவிக்கலாமென்று
அன்புற்றாரவர்மனந்தன்னில்.

22. அவ்வனத்திலோர்சிரியகுகையில்
அமர்ந்தவர்மிகமகிழ்ந்திட்டார்
செவ்வையாகவேநிருவிகற்பத்தில்
சீக்கிரமவர் நிலைத்திட்டார்.

23. இப்படிஇவர்வெகுதினமாக
யிருந்திருப்பதைவினவினர்
தப்பில்லாமலேயவரைச்சேர
தாம்தருணமென்றவரோடினர்.

24. அக்குகைவாசல்தன்னிலேபோகி
யவரும்மிகவும்வாடினர்
இக்குகைக்குள்ளேயிருப்பவரின்னா
ரென்பதாகவும்பாடினர்.

## குருவை யின்னாரென்று தெரிந்து துதித்தல்.

### விருத்தம். 25

மாதவன்படிக்கையாயும் மன்மதன்வைரிக்கந்த
பாதபூஷணமதாயும் பின்பந்தப்பதஞ்சலிப்பேர்
கோதரப்பெற்றுபின்பு பாணினிசூத்ரத்திற்கு
யேதமில்பாஷ்யம்செய்த யீசனும்நீரேயன்றோ.

தரு இராகம்-ஆரபி. 24.

பல்லவி.

ஆதிசேஷனேயிந்த அவதாரமாகவந்த
போதஸ்வரூபனல்லவோ.

அனுபல்லவி.

மாதவன்க்ஷீராப்தியில் மகிழும்படிக்கையாயும்
பாதபூஷணமந்தப் பரமசிவனுக்காயும். (ஆதிசேஷ)

சரணங்கள்.

1. பின்பொருகாலத்திலே பதஞ்சலியாகவந்து
பாணினிசூத்ரத்துக்கு பாஷ்பமதையுவந்து
அன்புடனருள்செய்த ஆண்டவனென்றறிந்து
இன்பங்கொடுக்குமுந்தன் யிணையடியையும்தாழ்ந்து (ஆ)

2. பக்ததயாபரரும் ப்ரம்மநிஷ்டருமான
உத்தமரையுணர்ந்து வோடிவந்தவனை
பித்தனையுமுவந்து ப்ரீதியுடனேமௌனத்
தத்துவத்தையுணர்த்தி தலைசெய்திடுவீர்தானுப் (ஆதி)

3. பாதபத்மந்தன்னிலே பரிவுடன்பணிந்திட்டேன்
ஆதரவுடனென்னை யாண்டுகொள்வாயென்றிட்டேன்
நாதாவுன்னைத்தவிற நமக்கில்லைகதியென்றேன்
நீதானுப்சன்யாசத்தைத நிலைக்கவைத்திடுமென்றேன் ()

நீ யாரென்றுகுரு கேழ்க்க ஆசார்யர் சொல்லும்

விருத்தம். 26

இங்கீவரெடுத்துச்சொன்னயிவ ரோடேசேதியெல்லாம்
அங்கையில்நெல்லியென்ன அறிந்திட்டபின்புயிந்தச்
சங்கரர்தனையும்நோக்கிச் செப்பினார்நீராரென்று
அங்கவர்கேட்டதற்கு அன்புடன்விடைதந்தாரே.

தரு-இராகம் பைரவி. 21

பல்லவி.

சச்சிதானந்தமாக சகலத்திலுமிருக்கும்
மிச்சம்சிவமேநாமாக்கும்

அநுபல்லவி.

துச்சமாகியதேகச் சேர்க்கைநாமல்லாவாகும்
அச்சப்படுத்தும்பூத கார்யமதுவேயாகும். (சச்சிதானந்)

சரணங்கள்.

1. இந்திரியமுதலாக யிசைத்திடும்பொருளல்லேன்
வப்பம்முதலாய்விடும் யிப்ராணகூட்டமல்லேன்
நொந்துமகிழும்மன வ்யாபாரம்நானல்லேன்
நுவலுங்கர்த்தாவாகிய புந்தியும்நானல்லேன். (சச்சி)

2. அஜ்ஞானமுதலான அதின்கார்யமுநானல்லேன்
அங்குமிங்குமலையும் அந்தஜீவனுமல்லேன்
ப்ரஜ்ஞானகனமான ப்ரம்மமேநானென்றேன்
போக்கும்வரவுமில்லாப் பூர்ணமதுவேயாவேன் (சச்)

3. வர்ணாச்ரமமுதலாம் வழக்குமெனக்குமில்லை
வார்த்திக்யமுதலான வார்த்தையெனக்குமில்லை
கர்ணாதிமுதலாக கேழ்க்குமிந்திரியமில்லை
காமக்ரோதமாகவே கலங்குமனமுமில்லை (சச்சி)

4. மாதாபிதாமுதலாம் மயக்கமெனக்குமில்லை
மகிழும்தேவர்முதலாய் மதிக்கும்லோகங்களில்லை
வேதமெஜ்ஞமுதலாய் விளம்பும்தீர்த்தமுமில்லை
வேறற்றசுழுப்தியில் விளங்கும்சூன்யமுமில்லை (சச்சி)

5. சாங்க்யாதிமுதலான சகலசாஸ்த்திரமுமில்லை
சகலாகமபுராண சமயமதுவுமில்லை
ஓங்கிமேல்கீழென்று வுரைக்கும்திக்கதுமில்லை
வுள்ளும்புறம்புமென்ப தொன்றுமெனக்குமில்லை (சச்சி)

6. சிலபிசுமுதலாய் நிகழும்வர்ணமுமில்லை
சிசுமுச்சமாகிய நினைவுமெனக்குமில்லை
காலதேசவஸ்துக்கள் கார்யமெனக்குமில்லை
ஞானவேறொருபொருள் கருத்திலெனக்குமில்லை (சச்சி)

7. குருசிஷ்யராகிய குறிப்புமெனக்குமில்லை
குணமூன்றினால்வரும் கொள்கையெனக்குமில்லை
கருணைத்திலபோதிக்கும் சாஸ்த்ரங்களெனக்கில்லை
தர்மாதர்மங்களுடன் சகலமுமெனக்கில்லை. (சச்சி)

8. ஜாக்ராதிமுதலான சர்வாவஸ்தையுமில்லை
சாந்திமுதலாகிய சத்குணங்களுமில்லை
ஆக்ரஹமாய்தேகத்தை யபிமானிப்பவரில்லை
யதினாலேயகங்கார மமகாரங்களுமில்லை (சச்சி)

9. எங்குந்நிறைந்திருக்கு மேகஸ்வரூபமேநான்
இடையூறில்லாததான வின்பஸ்வரூபமேநான்
பொங்கும்ப்ரம்மானந்தப் பூர்ணஸமுத்ரமேநான்
போக்கும்வரவுமற்ற போதஸ்வரூபமேநான் (சச்சி)

10 தேகமிந்திரியமற்ற சித்ஸ்வரூபமேதநான்
திகழும்பிராணாதியற்ற திவ்யஸ்வரூபமேநான்
ஆகமமதையற்ற ஆத்மஸ்வரூபமேநான்
அஜ்ஞாநாதிகளற்ற அகண்டஸ்வரூபமேநான். (சச்சி)



## கோவிந்தர் இவரைத்தெரிந்து உபதேசித்தல்.

### விருத்தம். 27

கோவிந்தபகவத்பாதர் கூறியவனைத்தும்கேட்டு
பாவனைவிட்டுஅந்த பரிபூர்ணநிஷ்டைதன்னில்
கேவலமாகத்தானே கொஞ்சம்போதிருந்துவிட்டு
சாவதானத்தாலந்த சங்கரரென்றறிந்தார்.

தரு-இராகம்-நாதநாமகிரியை. 26

பல்லவி.

சங்கரனேவாரும் வாரென்றார் ஸ்வாமிகோவிந்தர்
சங்கரனேவாரும் வாரென்றார்.

அனுபல்லவி.

அங்கையிநெல்லியைப்போல யறிந்தேனின்னவரென்று
சங்கைமுழுதும்விட்டுத் தெளிந்தேன் சிவனேயென்று (சங்)

சரணங்கள்.

1. கங்கைசந்திரன்ரண்டேன் காணுமலேமறைத்து
யிங்கேயெழுந்தருளி யிந்தக்கோலம்தரித்து (சங்)

2. மானும்மழுவுடனே தோனும்ரூபத்தைவிட்டுத்
தானுமிவ்விடம்வந்த சங்கதிகளைக்கேட்டு (சங்)

3. பாதியுருவமான பார்வதியைத்துறந்து
ஜோதிஸ்வரூபமான துங்கஞானம்சிறந்து (சங்)

4. இவ்விதமானீரும் என்னிடத்துபதேசம்
செவ்வையாகச்செய்யென்று செப்பினதுவேமோசம் ()

5. இங்கேபிரம்மமாகவே யிருக்குமுமக்குயின்னும்
எங்கேயுபதேசிக்க யிருக்கிறதுயின்னும் (சங்)

6. சத்தாயிருந்துநீரும் ஜகத்தைரக்ஷிக்கவேண்டி
இத்தனைதொழில்களும் எடுத்தீர்மிகவும்வேண்டி (சங்)

7. உலகத்துக்குபகாரம் உம்முடைவ்யவகாரம்
நிலைமையாகவேயது நிற்பதுஅளங்காரம் (சங்)

8. ஆனையினாலுமக்கு அன்புடனுபதேசம்
யீகையிதுவேகாலம் என்றவராநிதேசம் (சங்)

## உபதேசம் விருத்தம்.

இப்படிக்குகையில்நின்று யிருபாதம் தன்னையெடுத்து
மெய்ப்படக்காட்டும்போது மேன்மையாமன்பினோடும்
செப்பியபடியேவேதம் செய்தனர்பூஜைநன்றாய்
ஒப்பில்லா சன்யாசத்துக்குறியதாம் கார்யமெல்லாம்

தரு இராகம் இந்துஸ்தான் காபி.

பல்லவி.

உபதேசரஹஸ்யத்தை உண்மையாகஉரைத்தார்

அனுபல்லவி.

சுபமாகப்ரணவத்தை சூக்ஷமமாகத்யானித்தார் (உபதேச)

சரணங்கள்.

1. துரியாச்ரமத்திலுள்ள தூய்மைமுழும்சொன்னார்
பரமாஹம்ஸராயும்மை பண்ணினேனென்றுசொன்னார்
2. அவரிட்டகட்டளையை அனுஷ்டானங்களும்செய்து
தவராமலெப்பொழுதும் த்யானநிஷ்டையிலுய்து (உப)
3. பலதினமவருக்குப் பணிவிடைகளைச்செய்தார்
சிலகாலம்கழிந்தபின் செரியாய்நிஷ்டையடைந்தார் (உ)
4. இந்துகலாவென்றிட்ட பேத்தநாமம்படைத்த
அந்தநதியூரிலே அப்போ ஆரவாரித்த (உப)
5. அங்குள்ளபேர்களெல்லாம் ஆஹாகாரத்துடனே
பொங்கியழுகும்போது பூர்ணதயவுடனே (உப)
6. அந்தப்ப்ரவாஹம்தன்னை யழைத்துக்கமண்டலுவில்
மந்தஹாசத்துடனே மடக்கிவிட்டார்பூவில் (உப)
7. அதுகண்டபேர்களெல்லாம் ஆச்சர்யமாகத்தானே
யதிராஜனைத்துதித்தார் யாவருமன்புடனே (உப)
8. குருநாதரதுகேட்டு கொஞ்சங்கருவமற்று
பரமார்த்தநிஷ்டையிலே பழகினார்ப்ரதுக்காற்று (உப)

9. கோஷமாய்ச்சொன்னசேதி கோவிந்தபாதர்கேட்டு
பாஷியமிவர்தன்னைப் பண்ணச்சொல்லுவோமென்றிட்டு

10. நிருவிகல்பநிஷ்டையில் நின்றயிவரைப்பார்த்து
உறுதியாகவேயொரு வசனம்சொன்னாரிழுத்து (உப)

11. நிஷ்டையில்நீரிருந்து நிகிலஜனங்களுக்கும்
சிஷ்டாசாரமுழுதும் திகழும்படியாவர்க்கும் (உப)

12. வ்யாஸஸூத்திரத்திற்கு விரிவாகபாஷ்யம்செய்து
வ்யாஸங்கமங்கேயங்கே வகையுடனதைச்செய்து (உப)

13. வாரணாசியில்போகி வ்யாசஸூத்ரபாஷ்யத்தை
நேராகசிஷ்யருக்கு நீருரைத்திடுமத்தை (உப)

14. இவ்விதமுரைத்திட்டு யிஷ்டமுடன்கோவிந்தர்
அவ்விடத்திலிருந்து அகலவுத்தரவீய்ந்தார் (உப)

15. குருவுரைத்தமொழியை குறிப்புடன்சிரங்கொண்டு
துரைபாகஅவர்சென்றார் துறவரவேஷம்பூண்டு (உப)

16. வீபூதிருத்ராக்ஷத்தை விளங்கும்படிதரித்து
காவிவஸ்த்ரமரையில் களிப்புடனேவஹித்து (உப)

17. தண்டுகமண்டலத்தைத் தெரியக்கையிலேகொண்டு
கண்டவர்களெல்லோரும் காலில்பணியச்சென்று (உப)

18. பதரிவனத்தைவிட்டு பரிவுடன்காசிசென்று
அதிகமாகநிஷ்டையை யவரும்புரிந்துநின்று. (உப)

## காசிமாநகரில் பரமஹம்ஸர் விளங்கல்.



விருத்தம். 29

காசிமாநகரந்தன்னில் களிப்புடனிருக்கும்போது
நேசமாய்வந்தபேர்க்கு நிகழ்த்தியேஞானம்தன்னை
பேசுவதுபநிஷத்து பின்னொன்றும்பேச்வதில்லை
வாசமாய்க்காசிதன்னில் வாழ்ந்திருப்பதுவுஞ்சொல்வாம்.

தரு இராகம்-பைரவி. 23

பல்லவி.

காசிமாநகர்தன்னில் கெம்பீரமாக அந்த
தேசிகர்மகிழ்ந்திருந்தார்.

அநுபல்லவி.

ஆசையுடனேவந்தோர்க் கத்வைதஸ்வரூபத்தை
நேசத்துடனவருக்கு நித்யமுரைத்தாரத்தைத் (காசி

சரணங்கள்.

1. பரமஹம்ஸரென்ற ப்ரஸித்தியானநாமத்தை
ஸ்திரமாகவேசெய்தார் சீக்கிரமாயத்தைப்
பரவும்படிக்கிச்செய்தார் பரமாத்மஸ்வரூபத்தை
மரவாமலனுதினம் மதித்திட்டார்தன்போதத்தை (காசி

2. பாலேயும்நீரையும் பிரிக்கும்ஹம்ஸத்தைப்போலே
மூலாவித்தையினாலே மறைபட்டஆத்மாவிலே
ஸ்தூலமுதலாகவே சொல்லுமுபாதியிலே
மாலரவேபிரித்தார் மதனித்த ததிபோல (காசி

3. அஹமென்றபதத்திற்கு அர்த்தமாகுமாத்மாவே
அஹங்காரமுதலெல்லா மர்த்தமாகாததுவே
திகழாதபொருளெல்லாம் திகழ்வைப்பதாத்மாவே
அகண்டமாகஅது வாகும்பரமாத்மாவே. (காசி)

4. ஹம்ஸமென்றசப்தம் மாகுமிரண்டுபதம்
த்வஸ்மாகச்செய்யும் சொன்னவாக்யார்த்தம்நிதம்
ஹம்ஸமென்றதிலே யஹம் ஸஹவென்றபேதம்
ஹிம்ஸையன்றியிலே யிருப்பதுவேபோதம். (காசி)

5. எங்குமத்வைதந்தன்னை யெடுத்தெடுத்துவுரைத்தும்
துங்கமாகியநல்ல துறவறங்கள்தரித்தும்
எங்கெங்கேபார்த்தாலு மிதுவாகவேகோஷித்தும்
தங்குதலடியில்லாமல் செரியாகவேநடத்தும். (காசி)

## பத்மபாதர் சிஷ்யராதற்குக் கேழ்க்குதல்.



### விருத்தம். 30

சோளமாதேசந்தன்னில் துலங்குமோர்விப்ரபுத்ரன்
நானாவினைப்போக்காமல் நலமுடன்குருவைத்தேடி
நாளினால்தேசமெங்கும் திரிந்துகங்காதீரத்தில்
ஆளவந்தவரோயென்று அவரைக்கண்டிவருந்தாழ்ந்தார்.

### தரு-இராகம்-சஹானா. 29

### கண்ணிகள்.

1. சோழராஜன்தேசத்தில் தூயவிப்ரகுலத்தில்
ஊழ்வினையால்வந்தது ஒருகுழந்தையூழ்வினையால் வந்தது
2. சனந்தனப்பேர்தரித்து சர்வவித்தையுங்கற்று [தியந்து
மனந்தன்னிலுருதியத்து மருவிக்கொண்டு மனந்தன்னிலு
3. எங்கெங்குதேசத்திலு மேகமாகத்திரிந்து
வந்ததுமிகச்சிறந்து வாழ்ந்திடுதற்கு வந்ததுமிகச்சிறந்து
4. ஒருவிடத்திலுமந்த உத்தமகுருவில்லா
வருத்தத்தால்மிகவுநொந்த மனதுடனேவருத்தத்தால்மிகவு
5. கங்கைக்கரைக்கருகில் காசிமாநகர்தன்னில் [ம்பொருந்து
தங்கும்போதொருதினத்தில் சாதுக்களெல்லாந்தங்கும்
6. துங்கஞானம்படித்துத் துறவரங்கள்தரித்து [த்து
எங்குமிருப்பதையுத்து யிவரும்பார்த்து எங்குமிருப்பதையு
7. அவர்களையறிந்திட அத்புதம்தெரிந்திட
விவரமாகத்தெளிந்திட வேண்டிக்கொண்டிட விவரமாக
8. சுகப்ரம்மரிஷிபோன்ற தூயமுக்தரைக்கண்ட [ன்ற
அகமகிழ்ச்சியாகநின்ற அப்பொழுதவர் அகமகிழ்ச்சியாகநி
9. யிங்கிப்படியிருக்க என்னகாரணமென்று
சங்கையுற்றவரேயின்று சடிதியாகசங்கையுற்றவரேயின்று

10. இந்தப்படியாவரும் யிருப்பதற்குநேரும்
அந்தவகையைபுரையும் அடியேனுக்கு அந்தவகையுரையும்

11. என்றுகேட்டவர்தன்னை யிஷ்டமாய்ப்பார்த்துப்பின்னை
ஒன்றுனபொருளுமென்னை யாளும்படிக்கிஒன்றுனபொருளு
[மென்னை

12. தென்னாட்டிலேபிறந்து சிராகவேயிருந்து
இன்னாட்டிலேயேசிறந்து யெங்களையாண்டுயின்னாட்டி

13. வாக்குமனமுங்கூடி வர்ணிக்காததைநாடி
சீக்கிறமாகயிங்கோடித் திகழ்ந்ததென்றார் சீக்கிரமாக

14. சங்கரநாமத்துடன் சர்வவித்தைகளுடன்
இங்கொருவரும் தன்னுடன் யிருப்பவரை யிங்கொருவரும்

15. அத்வைதஸ்வரூபமா யாக்கிவைத்திடுவதாய்
தத்வமதுவேயுருவாய் தயைசெய்தது தத்வமதுவேயுருவாய்

## பத்மபாதர் சிஷ்யராதல்.

---

விருத்தம். 31

என்றவருரைக்கக்கேட்டு ஏகமாஞ்சித்தத்தோடே
சென்றவர்சரணம்தன்னைச்சீக்கிரம சேரவதற்கு
யின்றுதான்காலமென்று யெண்ணியேபோகும்போது
நன்றிதனைவேகண்டு நாதனைப்பணிந்திட்டாரே.

தரு-இராக-மோஹனம். 30

பல்லவி.

நாதனைநமஸ்கரித்தார் நாலாகச்சொல்லும்
வேதமார்க்கத்தா லர்ச்சித்தார்

அனுபல்லவி.

மாதவனுக்குமந்த மகத்தான அயனுக்கும்
பாதமுடிகாட்டாத பகவானும் பக்தருக்கும் (நாத)

சரணங்கள்.

1. நாலுவேதமும்தேடும், ஆறுசாஸ்த்ரமும்நாடும்
மாலயனவர்கூடும் மதிக்கப்படாதவீடும்
பாலியவயதோடும் பக்தர்மேல்நயவோடும்
சீலஞானத்திநீடும் செரியில்லையென்பதோடும். (நாத)

2. ஆசியெல்லாம்தேடிவந்தும் ஸ்ரீகுருவையநினைந்தும்
அகந்தன்னிலேமகிழ்ந்தும் அவரடியில்பணிந்தும்
மகிமைஞானம்மிருந்தும் மாசில்லாமலேயோர்ந்தும்
அகண்டமாகநிறைந்தும் அதுவாகவேயிருந்தும். (நாத)

3. சந்தனக்குபதேசம் யிப்பொழுதருள்நேசம்
வந்தால்மதிமோசம் வகையுடனேடும்தோஷம்
எந்தவிடமோவாசம் ஏகிவிடுமேதாசன்
உந்தனடிதானீசன் உறுதியென்பதேபாசம். (நாத)

4. இவ்விதம்கேட்டபக்தர்க் கிஷ்டப்படியேமுக்தர்
ஒவ்வும்படிக்கிக்கர்த்தர் உறுதியாகவேவைத்தார்
திவ்யப்ரணவார்த்தம் திகழும்படியேசேர்த்தார்
கவ்வும்வினையொழித்தார் கருமமனைத்துமத்தார் (நாத)

5. க்ரமமாகஸன்யாசத்தைக் காட்டிவைத்தவரத்தை
அமரர்களின்பதத்தை அற்பமென்றவர்சற்றை
மமதையகங்காரத்தை மதியாமல்துறந்தத்தை
சமத்வமானபதந்தைச் சார்ந்தனரகண்டத்தை. (நாத)

## பத்மபாதர் குருகுல வாசம்செய்தல்.

---

விருத்தம். 32

சற்குருக்ருபையைப்பெற்ற சனந்தனனென்றசிஷ்யன்
அர்க்கனேடொளியைப்போலே யவர்தனையனுசரித்தான்
சிற்கனவுருவம்பெற்று ஸ்ரீகுருவடியைப் போற்றி
நிற்கும்போதவரைக்கண்டு நிலரும்த்வேஷங்கொண்டார்.

தரு-இராகம்-சஹானா. 31

பல்லவி.

சனந்தனம் பேர்வகித்து சர்வகாலமுமிவர்
சங்கராடிபணிந்தார் சற்குருவானசங்கராடிபணிந்தார் (சனந்)

அநுபல்லவி.

மனந்தன்னிலுறுதியாய் மற்றொன்றுமில்லையென்று
அனவரதமுஞ்சொல்லி யவரிடத்திலேநின்று (சனந்)

சரணங்கள்.

1. இடையூறொருவந்தாலும் இல்லைநமக்கென்று
தடையில்லாமலவர்நின்று தன்மயமாக தடையில்லாமலவர்
மடைமையிரந்தஅந்த மவுனபாவத்தில்சென்று
தடையில்லாதானந்தத் தன்மையதுவேயென்று. (சனந்)

2. சாவும்பிறப்புமற்றுச் சச்சித்சுகமடைந்து
தாவும்மனமுமொழிந்து சந்ததமவர் தாவுமனமுமொழிந்து
பாவனைசெய்து ஆத்மாபரிபூர்ணமென்றறிந்து
ஜீவபாவப்ரமையைத் திகழாமலேமறந்து (சனந்)

3. சரியாய்நடக்குமந்தச் சிஷ்யமணியைப்பார்த்து [பாவித்து
பரிபூர்ணக்ருபைவகித்து பக்தனென்றவர் பரிபூர்ணக்ரு
அருகிலென்னேரமும் தன்னருமைசிஷ்யனாய்வைத்து
குருவிருக்கவெல்லோரும் கொண்டாடந்தோஷம்வகித்து

4. சனந்தனரான அந்த சிஷ்யனிடத்தில்வந்த [தொழிந்த
கனவைரமுழுதொழிந்த கல்மிஷமற்ற கனவைரமுழு
அனகனுமவர்தன்னை யக்கரையிலேசேர்ந்த
அனுக்ரகங்களைத்தந்த அன்புமிகமிகுந்த. (சனந்)

5. வாருமிக்கரைக்கென்ன வரிசையுடனேசொன்ன [யையுன்ன
பூரணக்ருபையையுன்ன பிடிவாதமாய் பூரணக்ருபை
நீரிலிரங்கவென்ன நீரஜபுஷ்பமென்ன
யாருமறியும்படி யவரடியிலேநின்ன. (சனந்)

6. பத்மங்காலைத்தாங்கிய பக்தரவரைப்பார்த்து [illegible] மகிழ்ந்து
பத்மபாதரென்றழைத்து பரிவுடனே பத்மபாதரென்
அத்வைதத்தைப்போதித்து அவர்மனத்தெளிவித்து
ஒத்தெல்லோருமிருக்க வுண்மையாய்க்ருபைவைத்து. (சனங்)

## வில்வநாதர் ஆசார்யரிடம் வருதலும், வாதமும்.

---

விருத்தம். 33

அனந்த சிஷ்யர்களோடே யவர்காசிநகரந்தன்னில்
தினமணிபோல்விளங்கிச் சென்றனர் ஒருதினத்தில்
மனமகிழ்ந்தவருமந்த மணிகர்ணிகைக்கிச்செல்ல
சோணவழிதன்னில் தேவன் தோன்றினன் புலையனாக.

தரு-இராகம் கேதாரகௌளம். 32

கண்ணிகள்.

1. தேவாதிதேவனான பரமாத்மா
தோன்றினார் புலையனாக
பாவனையுடனேதான அதையங்கே
பரமஹம்ஸருமேகாண.

2. ஜாதியில் புலையனாகிப் பிறந்தநீ
ஸஹஜமாய் வருவையானால்
நீதியோஉனக்கிதாகி நிற்பதும்
நேசமாய் விலகிப்போகி.

3. காணாமல்போய்விடென்றார் அதைக்கேட்டு
களிப்புடன் புலையன்னின்றார்
வீணாகப்படிப்பதென்றார் விஸ்வநாதர்
வீண்பேச்சத்வைதமென்றார்,

4. அன்னமயகோசந்தன்னை யழகாகச்
சொன்னையோ போவென்றென்னை
யின்றும் சைதன்யந்தன்னைப்போவென்று
யெதற்காக யிசைத்துச்சொன்னை

5. என்றந்தப்புலையன்கேழ்க்க அவருக்கு
ஒன்றும்தோன்றாமல்பார்க்க
சென்றங்கே யெதிரில்நிற்கச்
சிவபெருமான் கண்டங்கே கண்கள்சிவக்க.

6. கங்கையில் ப்ரதிபலித்த யிரவிக்கும்
சண்டாளர் குடத்தில்வைத்த
கங்கைஜலமதனில்தோத்த
அப்பொழுது கெடுதலுண்டாமோசுத்த.

7. பொன்னின்குடமதனில் தோற்றும்வானுச்கும்
மண்ணின்குடமதனில் தோற்றும்
பின்னமதுவுண்டோ சற்றும் அதுபோல
ப்ரம்மத்துக்குண்டோசற்றும்.

8. எதுகருதி யதிச்ரேஷ்டனே யிப்பொழுது
யிசைந்திடும் வார்த்தைதானே
அதையுலாத்திடுமென்றேனே
அப்பொழுது அவருமுரைத்திட்டதுடனே.

9. ப்ரத்யக்குப்ரமம்மிரண்டும் ஏகமாய்போனதை
நீரும்கண்டும்
மித்தையாம் தேஹம்கொண்டும்
யதியென்றும் மயங்கிநீர் புலையனென்றும்

10. இவ்விதம் புலையனுரைக்க யிதுகேட்டு
யதிச்ரேஷ்டர் தான்சிரக்க
ஒவ்வுமிது வுண்மையென்க வுயர்வான
உத்தமமதென்று நிற்க.

11. ஜாக்ரஸ்வப்னஸுஷுப்ததி மூன்றிலும்
தடையின்றி யிருக்குமூர்த்தி
சீக்ரமாயறிந்துகீர்த்தி யுடையவனே
ச்லாக்யமென்பது வென்னார்த்தி.

12. பகுப்பற்றப் ப்ரம்மதனைக் காணப்
பார்த்திருக்கையிலுமுன்னே
வெகுமானம் செய்யப்பின்னே விகர்ப்பங்கள்
விளங்காமல்போகும் சொன்னேன்.

13. ஸத்யஞானஸ்வரூபம் தடையின்றித்
தானாகயிருக்கும்பாவம்
வைத்தவன் மனதிலேகம்
வகையுடனேவாழ்பவன் ப்ரம்மமாவான்.

14. அவனெந்தன் குருவுமாவான்
அனுதினமும் அகண்டமத்வைதபாவம்
தவறாமலிருக்கும்போதம் தரித்தவனும்
சண்டாளனானபோதும்.

15 விப்ரகுலந்தன்னையடைந்தும் விதிபாக
வேணபடிகர்மம்செய்து
அப்ரம்யதிதர்மம் பூணந்து
யாவர்க்கும் ஆசார்யதர்மம்சிறந்து.

16. இருக்கின்றபதியாகிலும் அல்லாமல்
இழிவான குலமாகிலும்
மறப்பற்றுதன்னையறிந்தும் மகிழ்பவன்
மகத்தானகுருவெனக்கும்.

17. என்றுசங்கரனேநிலையினைகேட்டு
யிழிவான வுருவாகவே
நின்றபரமனுங்கூறவே நீரப்போ
நிகிலஜகத்குருவாகவே

18. ஆகவேண்டுமென்றிட்டு அப்பொழுது
அவ்வுருதனையும்விட்டு
வேகமாய்வ்ருஷபம் தொட்டுயேறினர்
வேதங்கள் நாலுமட்டும்.

19. புருஷனுருவமடைந்தப்போது நிர்க்கவே
புதுமையாய்ப் பார்க்கும்போது
அல்ரவர் விச்வேசனிது அழகாக
அவரையும் பார்த்துமீது.

20. வ்யாஸமுனி செய்த ஸூத்ரம்
அதற்குநீர் வ்யாக்யானபங்க்திபாஷ்யம்
ஆசகலவுரைக்கவேண்டும்
அதின்மேல் யாவரும் பிழைக்கவேண்டும்.

21. சங்கரருக்கனுக்ரகித்து விச்வேசர்
சென்றனர் விடையைப்பெத்து
அங்கிருந்த வுருமரைத்து அப்போது
ஆனந்தவடிவாம் சித்து.

## வ்யாஸஸூத்ரத்திற்கு பாஷ்யம் செய்தல்.

---

விருத்தம்.

ஈசனிவ்விதமுரைத்து ஏகிய பின்புமிந்தத்
தேசிகர் மனமகிழ்ந்து செய்திடஸூத்ரபாஷ்யம்
ஆசிலா கீதாபாஷ்யம் அப்படிச்ருதியின் பாஷ்யம்
நேசமாய்ச் செய்தாரின்னும் நினைவுடன் சிரியக்ரந்தம்.

தரு-இராகம்-சங்கராபரணம். 33

பல்லவி.

வ்யாஸர்சொன்ன ஸூத்ரத்திற்கு விளக்கமாக
வரைந்திட்டார் பாஷ்யமதற்கு.

அநுபல்லவி.

நேசத்துடனேயந்த நிகிலஸூத்ரங்களையும்
ஆசகலப்பிரித்தா ரதிகரணங்களையும். (வ்யாஸர்)

சரணங்கள்.

1. நாற்றிக்கொண்ணுத்திரண்டாய் நிலைத்த அதிகரணம்
ஈற்றிலிதலைவெல்லா ச்சூத்திரங்களுக்கு காரணம்
சாற்றிடுநிதினிலே ஸச்சித்ஸுகப்ரமாணம்
தோற்றமானதைபினிலே சொல்லுமிது ஆரணம் (வ்யா)

2. அருமையான பாஷ்யத்தை யவர்களுக்கு வுரைத்து
குருவும் சிஷ்யருமாகக் கூட்டமாகநிலைத்து
சிரியக்ரந்தங்களையும் சிலர்களுக்குரைத்து
இருக்கும்பொழுதிலவ ரேகமாகக்களித்து. (வ்யாஸர்)

3. பத்மபாதர்முதலாய் பரிவுள்ள சிஷ்யர்கட்கும்
அத்வைதபாஷ்யம் தன்னையன்புடனேயுரைக்கும்
இத்வைதப்ரபஞ்சத்தை யில்லாமலேகெடுக்கும்
ஸத்தியம்ப்ரம்மமென்று சந்ததமுமிருக்கும். (வ்யாஸர்)

## வ்யாஸர்வந்து கேழ்த்தல்.

விருத்தம்.

இப்படிபாஷ்யம்சொல்லி யிருக்கையில் வ்யாஸரங்கே
விப்ரவேஷம்பூண்டு வயதான கிழவன்போலே
அப்பொழு தங்கேவந்து யவர்களைதட்டிப்பேசி
செப்புவதென்னநீங்கள் தெரியவும்சொல்லீரென்பார்.

தரு-இராகம்-கன்னடப்யாகு 24.

கண்ணிகள்.

1. என்னசொன்னீர்பாட மிவர்களுக்கு
அன்னதனையெடுத்து அரையெனக்கு
2. என்றுகேட்டவருக்கு யிஷ்டமுடன்நின்று
சங்கரரங்கே நிகழ்த்தும்த்ருடம்.
3. வ்யாஸஸூத்ரத்திற்கு விரிவாகவே
பாஷ்யமொன்றுரைத்தேன் பரிவாகவே.

4. அந்தையெடுத்தவர்க்கு பாடம்சொன்னேன்
சுத்தமதுவேயென்று துணிந்துநின்னேன்.

6. தேசிகருரைத்திட்டார் தெளிவாகவே
ஆசகலவேயவர் அழகாகவே.

5. இந்நூலுள்ளபிழைகளை யெடுத்திடென்றார்
அதுகேட்டு அவரதையுரையுமென்றார்.

7. அதுகேட்டுவ்யாசர்மிக அதிசயித்தார்
புதுமைபுதுமையென்று புகழ்ந்துகொண்டார்.

8. இன்னுமொருசூத்ரத்தை யெடுத்தெடுத்துச்
சொன்னவ்யாஸரைப்பார்த்து தோல்வியத்து.

9. அந்தச்சூத்ரங்கேட்டதற்கு அர்த்தம்நன்றாய்ச்
சங்கரனுரைக்கவே நினைத்துச்சொன்னார்

10. இப்படியிருவரும் இளைப்பாமலே
செப்புமொழியைக்கேட்டு த்ருடத்தினாலே.

11. பத்மபாதருமப்பார் பரிவுடனே
சுத்தப்ரம்மமாகவே துணிவுடனே.

12. சங்கரரும் நாரணர்தானுமிப்போ
சங்கையுத்திரம்சொன்னால் தீர்வதெப்போ.

13. இவ்விதமுரைத்திட இஷ்டன்வார்த்தைதக்கி
அவ்வவேயிருவரும் ஒழிந்தார்விக்கி.

14. அதற்குமேலாரியர்கள பாஷ்யந்தன்னை
புதுமையாய்ப் பிரித்துப்பார்த்தார்பின்னை.

15. என்னுடைய அபிப்ராயமேயிதிலே
நன்றாகயிருக்குதென்றாதிலே.

16. யிவாரியிவின்னுமிரு முகூர்த்தத்திலே
தவறிவிடுவதென்று தெரிந்ததிலே.

17. தன்னுடைய தலத்தினால் தவறியதும்
இன்னம்பதினாறாண்டு ஏற்பட்டதும்.

18. சங்கரனையணைத்துத் தழுவிக்கொண்டும்
பொங்கும்பூர்ணதயையால் புகழ்ந்துமீண்டும்.

19. அத்வைதபாஷ்யமிந்த அகிலமெங்கும்
விஸ்தாரமாய்ப்பரவ விளம்புமிங்கும்.

20. என்றுரைத்திட்டுவ்யாஸர் இக்ஷணமே
நன்றென்றுமறைந்திட்டார் நமதிடமே.

## காசியைவிட்டு ப்ரயாகைபோய் நடந்த விருத்தாந்தம்.

---

விருத்தம். 26

வியாஸர்போய் மறைந்தபின்பு வேறுமேநான்றுமலைந்த
தேசிகர் மனதைத்தேற்றித் திரும்பவும் வியாஸர்சொன்ன
மாசற்றவுரையை யெங்கும் மாறாமல் விளக்கவேண்டி
காசியைவிட்டு சிஷ்ய கணத்துடன் ப்ரயாகைசென்றார்.

தரு-இராகம் மத்யமாவதி. 35

பல்லவி.

காசிமாநகரம்விட்டார் களிப்புடனே
தேசிகர் ப்ரயாணப்பட்டார்.

அநுபல்லவி.

ஆசகலவேவந்தா ரந்தப்ரயாகையிலே
தேசத்தில் சிறப்பான திருவேணிக்கரையிலே. (காசி)

சரணங்கள்.

1. கங்கையமுனைக்கூடி களிக்கின்றவிடத்திலே
மங்கைஸரஸ்வதியும் மகிழ்ந்துசேர்ந்திடத்திலே
சங்கரர்பேர்வகித்த ஸன்யாஸத்ருடத்திலே
தங்ஞானத்தினாலே சுகப்ரம்மரிஷிபோல. (காசி)

2. ஆரியரவிடத்தில் அன்னைசிந்தையுடனே
சீருடன் தொடர்ந்திட்ட சிஷ்யவர்க்கத்துடனே
நீரிலேமுழுகினார் நித்யஞானத்துடனே
சூரியஸ்தலத்திலே குருவுங்களிப்புடனே. (காசி)

3. பச்சிலைகள்நிறைந்த பெரியமாக்தடியில்
அச்சமயமவரும் அழகாகவட்காரையில்
ஓச்சையுடனெல்லோரும் மொருமிக்கவர்பேசையில்
யிச்சேதியிவர்காதில் விழுந்ததுயிக்காலையில் (காசி)

4. கருமமார்க்கமுழுதும் களிப்புடன்ஸ்தாபித்தவர்
பெருமையுடனேபட்ட பாதப்போர்தரித்தவர்
உருதியாய்நெருப்பிட்ட வுமிக்குழியிலேயவர்
ஒருவராய்ப்பிரவேசித்தா ருண்மையறியோமவர். (காசி)

5. இம்மொழியினைவிபே யிங்கிருந்ததேசிகர்
அம்மரத்தடிவிட்டு அவரிடத்திலேகேசர்
செம்மையாகவேவந்து சேதிமுழுதுமவர்
உண்மையாகவேகேட்டார் உரைபென்றவரையிவர். ( )

6. பட்டபாதர்தான்வந்த பெருமைமுழுதும்சொன்னார்
இஷ்டருமதுகேட்டு யிந்தாபாவமென்றார்
பட்டநெருப்புடனே பார்க்தார்பாஷ்பமென்றாய்
சிஷ்டாச்சாரப்படியே சிறப்பாயிருக்குதென்றார் (காசி)

7. மண்டனமிச்ரனென்ற மாசற்றசிஷ்யனுக்கு
விண்டுரைசெப்புமென்று விடைகொடுத்தவருக்கு
கண்டசங்கராங்கே களிப்புடனவருக்கு
விண்டுரைசெய்யக்கேட்டு வெந்துவிட்டாரதற்கு. (காசி)

## மாயுஷ்மதிபுரம்போய் மண்டனரைக் காண்குதல்.

---

### விருத்தம். 37

இங்ஙெனிரந்தபின்பு யிஷ்டமாம்சிஷ்யரெல்லாம்
தங்காமலழுதுகொண்டு தங்களோடடத்தில்போனார்
சங்கரபகவத்பாதர் திரும்பவுமவிடம்விட்டுத்
துங்கமாயுஷ்மதிக்குத் துரையுடனடந்தாரப்போ.

கரு-இராகம்-காம்போதி. 36

பல்லவி.

மாயுஷ்மதிபுரத்தை மகிழ்ச்சியுடனேகண்டார்
மகாதிக்கரையில்சென்று.

அநுபல்லவி.

ஆயுமொழியுமற்று வுள்ளவர்களெல்லோரும்
வாயில்வேதமந்த்ரத்தை வரிசையுடனேகூறும். (மாயு)

சரணங்கள்.

1. மண்டனமிச்ரனென்ற மகிமையுள்ளவர்வீடு
கண்டறியாதவராய்க் கலங்கினார்கருத்தோடு
எண்டிசையுந்திரிந்து எங்கும் காணாமல்பாடு
கொண்டவராய்நதியில் கோதையவர்களோடு. (மாயு)

2. இக்குசத்கர்மம்செய்து யிருக்குமண்டனர்க்ரகம்
எங்கேயிருக்குதென்று யிவர்கேழ்க்கும்போதுசுகம்
அங்கேகூட்டிலிருந்து அநுவும்வேதவிசாரம்
சங்கையில்லாமல்செய்து சனிக்காததுவேக்ரகம். (மாயு)

3. அக்குறிகளைக்கேட்டு அம்மனைசெல்லும்போது
ஒக்கநலைவச்சாற்றி உத்தமவிப்ராது
மிக்ககுலம்பிறந்த மேன்மைபாராட்டியிது
தக்கவஜமுனிவ்யாசர் சம்மதப்படிசெய்து. (மாயு)

4. பிதுருக்கள்தினமென்று பெருமைபாராட்டியந்த
மதிமான்ச்ரார்த்தம்செய்தபோது மகிமையடைந்தயிந்த
யதியவர்மனைக்குள்ளே யெவ்விதமோநுழைந்த
அதுகண்டமண்டனர்க்கு அதிககோபங்கள்வந்த. (மாயு)

5. ச்ரார்த்தகாலத்திலீரும் தடையின்றிவரலாமோ
பார்த்தாலிவ்வுருவத்தை ப்ராயச்சித்தம்செய்யலாமோ
ச்ரார்த்தம் நஷ்டமாகுமோ செய்வதென்னமாய்போமோ
ஊர்த்தாவுன்னுடன்கூட வார்த்தைசொல்வதுமாமோ.

6. சித்தம்போகவுரைத்த சேதிமுழுதக்கந்த
கர்த்தன்குருவுரைத்த கபடவார்த்தைகள்சொந்த
அர்த்தமென்றறியாத அந்தமண்டனர்க்கிந்த
வ்யார்த்தம்சராத்தமென்பந்த வ்யாஸருரைத்தார்முந்த.

7. கர்மஸூத்ரங்கள்செய்த காரத்தூடன்ஜைமுனியும்
மர்மமறியாமலே மயங்கினுரயிப்போநீயும்
தர்மதியைவிடுத்துத் தூயசங்கரரையும்
நிர்மலமனதுடன் நீவரிவிஷ்ணுவாயும். (மாயு)

8. இதுகேட்டுசங்கரரும் எனக்குபிக்ஷைவாதத்தை
பொதுவாகக்கொடுத்திட்டால் போதுமானதுஅந்தைப
மதிமானுகியநீயும் மகிழ்ந்துகொடுமனத்தைத்
ததியிதுயென்றுசொன்னுர் சங்கரருடையவித்தைத(மாயு)

9. மண்டனர்சம்மதித்து மனதில்சிந்தனையத்துக்
கொண்டாருத்துக்கேற்க கொடுப்பேன்பிக்ஷவாதத்துக்
குண்டுயிப்பொழுதுநீர் குறையில்லாமலேவைத்து
பிண்டபிதிர்கார்யத்தைப் பெசகாமலேநடத்து. (மாயு)

10. விஷ்ணுவர்ணத்திலந்த வேளையில்சங்கரரும்
யிஷ்டமாகயிருந்து யிவரும்முனிவரும்
சிஷ்டர்செய்யுங்கர்மத்தைச் செரிவரச்செய்துநீரும்
கஷ்டப்படுத்தாமலே சேனுப் சங்கையைத்தீரும். (மாயு)

## மண்டனருக்கும், சங்கரருக்கும் நடந்தசம்வாதம்.

விருத்தம். 38

சங்கரர்பின்புஅந்த ஜைமுனிவ்யாஸர்தன்னை
இங்கிதமாகப்பார்த்து யிவரிங்கேதோஷியானுல்
அங்கத்திலென்றுபத்வத யணிந்திடவேண்டியநானும்
செங்கினுல் அவர்ரூபத்தைச் சடுதியில்தரிப்பேனென்றுர்.

தரு—இராகம்-மூகாரி. 37
கண்ணிகள்.

1. மாமுனிவரேநீங்க ளிருபேரும் மிங்கே
யாமதின்சாக்ஷியென்று ரிருபேரும்
2. அதுகேட்டுமாமுனிவர் சொல்வாரே நாங்கள்
பொதுவென்றால் நீங்களிங்கேவிள்வீரே.
3. ஸரஸவாணியைசாக்ஷி வைப்பீரே
அவள் உரைக்கும்மொழியைகேட்டு நடப்பீரே.
4. அம்மொழிகேட்டபிந்த யிருபேரும்அந்த
அம்மையையழைத்தாரே வருமாறும்.
5. அடுத்தவரமழைக்கவும் வந்தாளே பூவைத்
தொடுத்திவர் கழுத்திலே போட்டாளே.
6. முந்தித்தோல்வியடைந்தால் பூவாடும்என்று
அந்தமாறு முரைத்துப்போய்விடும்.
7. இவர்கள்வாதங்கள்செய்தார்வெகு காலம் பின்பு
பவுர்குலைந்தார் மண்டனரிக்காலம்.
8. மாலையும்வாடக்கண்டா ளம்மாது அங்கே
வேலைமுடிந்தாயிற்றென்று ளிம்மாது.
9. அதுகேட்டுமண்டனரும் விரைவாக அப்போ
யதிவேஷம்பூணமிகக் கரையாக
10. சங்கரரைப்பணிந்து யிவர்தானும் நன்றாயத்
துங்கஞானம் சொல்லென்று ரவர்தானும்
11. ஸன்யாஸம் செய்தருளுமென்றாரே யவர்
தன்யனாகவேண்டுமென்றாரே.

## வாணியை ஆகர்ஷணஞ் செய்தல்.

---

விருத்தம். 39.

இவர்தோல்வியடைந்தபின்பு யிஷ்டமாய்வாணிதானும்
அவர்துறவடையுமுன்னே யந்தரக்ஷத்திற்செல்ல
உவப்புடன்கிளம்பும்போதில் உத்தமர் துர்க்காமந்தரம்
தவறாமல்ஜபித்துப்பின்னும் தடைசெய்துகட்டிவிட்டார்.

தரு-இராகம்-புன்னாகவராளி. 38

பல்லவி.

ஸரஸவாணியும்சொன்னாளே சங்கரரிடம்
ஸரஸவாணியும்சொன்னாளே.

அனுபல்லவி.

துருவாஸர்சாபத்தாலே துரையுடனிங்கே வந்தேன்
மருசாபப்படியிப்போ மனதுமகிழ்ந்துவந்தேன் (ஸரஸ)

சரணங்கள்.

1. நான்வந்தபொழுதிலிங்கே நாயகரிவர்
தான்வந்தாரென்னையாளங்கே
ஊன்வளர்சரீரத்தை யுவந்திருக்கநான்கங்கை
மான்வந்துதன்னைவிட்டு மகிழுவைத்திடயிங்கே. (ஸரஸ)

2. மத்தானவுமைகண்டெந்தன் மனமகிழ்ந்து
சுகமாககுளிர்ந்தொன்றெந்தன்
வெகுகாலமானசாபம் விலகிப்போய்விட்டதுந்தன்
மகிமையைபறிந்திங்கேமகிழ்ந்திருப்பதேசொந்தம் (ஸர)

3. அல்லடுடனவிடம்போக எந்தனுக்கிப்போ
விடைகொடுத்திடுமேயேகத்
தடையில்லாமலேநீரும் செய்வனைத்தும்யோக
த்ருடபாவனையினாலே தோன்றிவிடுவதாக. (ஸரஸ)

4. அங்கிருந்தவனைச்சுட்டி யழகாயிவர்
இங்கிருக்கும்படிகட்டி
துங்கஞானம்படைத்த துணிவினாலேபதட்டி.
சங்கரருரைத்திட்ட சேதிமுழுதுங்கேட்டி (ஸரஸ)

5. பர்த்தாவின்சரீரத்திலே பாதியாகும்
அத்தாவித்தருணத்திலே
வித்தாந்தரஹஸ்யத்தைச் செப்பியுன்னிடத்திலே
வைத்துந்தன்கணவனை வகிப்பேன்ஸன்யாஸத்திலே.

## சங்கருக்கும் வாணிக்கும் வாதம்.

விருத்தம். 40

சங்கருரைத்த அந்தத்தேசகிலைக்கேட்டுவாணி
மங்களவாக்கினாலே மகிழ்ந்தந்த சாஸ்த்ரமெல்லாம்
சங்கித்துக்கேட்டாள்ஸப்தசதமாம் நாளில்பின்னும்
அங்கிவன்காமசாஸ்த்ர அடைவெல்லாம்கேட்டாள்தானே.

தரு-இராகம்-பைரவி. 39

பல்லவி.

சங்கரனும்வாணியும் செய்தார்கள்மிகவாதம்
தங்குதடையில்லாவிதம்.

அனுபல்லவி.

அங்கங்கேசாஸ்த்ரத்தில் அமைந்திடும் ரஹஸ்யத்தை
மங்கையாகியவாணி மதித்துகேட்டாளர்த்தத்தை (சங்கர)

சரணங்கள்.

1. பாஷியமுரைத்திட்ட பரமார்த்தஸ்வரூபத்தை
நேசமுடனெனக்கு நிகழ்த்துமென்றாளர்த்தத்தை
தேசிகனுகேட்டுத் தெரியச்சொல்லுவார்த்தை
மாசில்லாமலேகேட்ட மங்கைக்கு உத்தரத்தை. (சங்க)

2 இஷ்டமுடனேயின்னம் எடுத்துக்கேட்டவளந்த
சிஷ்டருரைத்ததெல்லாம் தெரிந்துகொண்டாளந்த
வெட்டவெளியுருவாய் விளங்குநின்றிரெந்த [சொந்த
னிஷ்டப்படியேசொன்னு லெடுத்துக்கொள்ளுவேன்

3. காமசாஸ்த்ரத்தில்சொன்ன கபடங்கள்முழுதையும்
நீமறைக்காமல்சொன்னால் நிரப்பேனிவ்விடத்தில்
பூமியில்புகழ்பெற்ற பூர்ணஉன்தபவையும்
நாமகிழ்ச்சியுடனே நப்புவேனுன்தனையும். (சங்கர)

4. இங்குவாணியுரைத்த பிடாரனவார்த்தைகளை
சங்கையுடனேகேட்டுத் திகைத்தவருள்ளருளை
தங்கும்படிக்குவைத்துத் தானுமந்தப்பொருளை
மங்கைபிடத்திலொரு மாத மவதிகளை. (சங்

பரகாயப்ரவேசம் செய்ய சிஷ்யரிடத்தில் கேட்குதல்

விருத்தம். 41

இங்கிவரவதிகேட்டு யிருக்கையில்வாணிதானும்
ஸ்ரீங்காரசாஸ்த்ரந்தன்னைத்தெரிந்துவா வென்றுசொல்லி
சங்கரர்மனமகிழ்ந்துசிஷ்யர்களுடனே சென்று
அங்கொருசவங்கிடக்க அதைக்கண்டுசொல்லலுற்றார்.

தரு. இராகம்-பைரவி 40

பல்லவி.

மன்னவன்சரீரத்தில் மகிழ்ந்துநான்ப்ரவேசிக்க.
என்னசொல்கிறீர்சிஷ்யர்கள்.

அனுபல்லவி.

என்னுடையசரீரத்தை யித்தரையிலேவிட்டு
பின்னையச்சரீரத்தை ப்ரீதியுடனேதொட்டு. (மன்னவ

சரணங்கள்.

1. வாணிகேட்டகேள்விக்கு விடையிப்போகொடுத்திட
ஆணும்பெண்ணுமாய்க்கூடும் அந்தவித்தையைநாட
காணுமிச்சரீரத்தைக் களிப்பாய்க்குகையில்போட
வேணுமென்றென்மனது விரும்பியதையுங்கூட (மன்

2. நீங்களெல்லோருமிந்த நீண்டகுகையிருந்து
தாங்கியிச்சரீரத்தை சவுக்யமாய் வைத்திருந்து
நீங்காமல்காத்திருந்தால் நினைந்தபடியேசேர்ந்து
பாங்காயவ்வாறுபவம் பகர்ந்துவிடுவேனோர்ந்து. (மன்

## தூதர்தேடி ஆசார்யர் சரீரத்தைக்காணல்.

---

### விருத்தம். 43

மந்திரியாஜ்ஞாபிப்பான் மரித்திட்டசவத்தையெல்லாம்
தந்திரமாயெடுத்து தகனங்கள்செய்துவிட்டு
வந்துவிடென்றுசொல்ல வகையுடன்சென்றுதூதர்
சந்துபொந்துகளிலெல்லாம் தேடியோரிடத்தில்கண்டார்.

### பல்லவி.

தேடப்புரப்பட்டார்சடிதியில்தூதர் சவமிருக்கு
மிடங்களெல்லாம் தேடப்புரப்பட்டார்.

### அநுபல்லவி.

நாடுநகரங்களும் நற்குன்றுகுகைகளும்
ஓடித்திரிந்துமவர் ஒவ்வொரிடங்களிலும் (தேடப்)

### சரணங்கள்.

1. காடுவனமுதலாய் கண்டவிடங்களிலும்
மூடியிருக்குநின்ற மூலைமுடக்குகளும் (தேடப்)

2 எங்கும்தேடித்திரிந்து யிளைத்தோரிடத்தில் சென்று
தங்கும்பொழுதிலங்கே தனித்தெல்லோருமாய்நின்று

3 பத்துப்பேராகவொரு ப்ரேதம்நடுவில்வைத்து
சுத்திக்காத்துக்கொண்டவர் தெரியாமலேமறைத்துத்

4 தங்கள்குருவுரைத்த திவ்யச்லோகங்கள்போலே
யிங்குபாடியிவர்கள் யிருக்கின்றகாலையிலே (தேடப்)

5 பஜகோவிந்தமென்று பல்லவிகளைச்சொல்லி
நிஜகுருவையப்போது நினைத்தார்களதுசொல்லி.

6 யிப்படியிவர்நிற்க யிங்குவந்ததூதர்கள்
தப்படியாயடித்துச் சவத்தைப்பிடுங்கினார்கள் ()

7 அதுகண்டுஅவர்களும் அகத்தில்விசனத்தோடே
புதுமைபுதுமையென்று புலம்பினரவரோடே (தே)

8 திக்குதிக்கிலும்சென்று தெரியாமல்பாடிக்கொண்டு
துக்கம்மனதுடனே சுழன்றுதிரிந்துகொண்டு (தேட)

9 அரமனைவாசலுக்கு அவரிலொருவர்சென்று
அரைந்தார்கள்பலவாக அத்புதச்ருதியொன்று ()

## சிஷ்யர் அரசனிடம்சென்று ஞாபகபடுதல்.

---

விருத்தம். 44

சந்தோசக்ருதியிற்சொன்ன ஸத்குருவுபதேசத்தை
யிந்தவேளையிலேயிங்கே யிவர்களுமெடுத்துச் சொல்ல
அந்தவாக்யத்தைக்கேட்டு அரசனவ்வுடலைவிட்டு
வந்தவர் பார்க்கும்போது வைத்திடந்தில்லைதேகம்.

தரு-இராகம் இந்துஸ்தான்காபி. 43

பல்லவி.

தத்வமஸியென்றவர் சந்ததம்பாடினார்
இத்வைதப்ரபஞ்சத்தை யில்லையென்றேகூறினார்.

அநுபல்லவி.

ஸத்வரஜஸ்தமஸைச் சடிதியிலொழியென்பார்
அத்வைதஸ்வரூபமே யனவரதம் நீயென்பார். (தத்வமஸி)

சரணங்கள்.

1. ஸ்வப்பனநிகரிந்தச் சொல்லும் ப்ரபஞ்சமெல்லாம்
அப்ரகஜாதிகள்போல் ஆகுமுலகமெல்லாம் (தத்வமஸி)

2. கானலில் ஜலம்போல் காணும்பரபஞ்சம்பொய்யே
ஆனந்தஸ்வரூபமே யனவரதமும்மெய்யே (தத்வமஸி)

3. இவருரைத்தமொழியை யிஷ்டமுடனேகேட்டும்
தவறாமல் பத்மபாதர் தாளைவணங்கிமீட்டும்
சவமானசரீரத்தைச் சடிதியாயடைந்திட்டும்
அவமாகச்சேந்திரா் அங்கவர்மதிகெட்டும். (மன்ன)

4. அதிலுவித்தேகம்விட்டு அந்தச்சரீரமேதன்னில்
புதுமையாய்ப்ரவேசித்துப் போகக்கூடாதுமுன்னில்
அதிகருசிஜனித்து அமிழ்ந்துவிட்டிடும்பின்னில்
இதில்வரவேண்டுமென்று யெண்ணம்வராதுவுன்னில் ()

5. அதுகேட்டுசெங்காரும் அதிகஆச்சர்யப்பட்டு
மதிகெட்டுபோகுமென்று மருத்ததுமிருக்கட்டும்
பதுமபத்திரம்தண்ணில் பற்றுமோஅதைக்காட்டும்
அதிசயமதிசயம் மறைந்தசொற்களும்மீட்டும். (மன்ன)

6. என்னைமயக்குமென்று யிசைந்துநீர் சொல்லுவதும்
பின்னமில்லாதயெந்தன் பெருமையறிந்தபோதும்
தன்னிடத்திலேவைத்த தன்மைவிச்வாசமதும்
சொன்னதன்றியிவ்வேறே த்வைதமில்லையென்பதும் ()

7. அறிந்திருக்கிறோனாலும் அதிலேயிவ்வுடலை
மறைந்துவைத்திடுமென்று மறுபடிசொன்னகாலை
யுருதியுடனச்சொல்லை யுளத்தில்வைப்பேனிக்காலை
பிரியப்படியேசெய்யப் போகலாமதிலே. (மன்னவன்)

## அமருகராஜன் சரீரத்தில் ப்ரவேசித்து கலாசாஸ்திரமறிதல்.

### விருத்தம். 42

அமருகராஜன்தேகத் தப்பொழுதடைந்துகொண்டு
மமதையோடகங்காரத்தை மனதிலேவகித்தவாபோல்
தமர்சுற்றத்தாரத்தோடு தலைவருமிருந்துகொண்டு
அமர்செயும்காமன்போரில் அமிழவேதலைப்பட்டாரே.

தரு-இராகம்-உசேனி.

கண்ணிகள்.

1. சுரதலீலையின் சுகத்தைபறிந்திட்டார் யதிச்ரேஷ்டரு
பாபரப்புடன்ப்ரமைத்து நின்றிட்டார். [ருமப்போ]

2. காமசாஸ்த்திரத்தில் கருத்தைநுழைத்திட்டார் யதிச்ரேஷ்ட
தாமுமவரைத்தழுவியணைத்திட்டார். [ருமப்போ]

3. அனந்தம் ஸ்திரீயுடன் அவரும் மகிழ்ந்திட்டார் யதிச்ரேஷ்ட
மனிதானந்தத்தில் மகிழ்ச்சியடைந்திட்டார். [ருமப்போ]

4. இப்படிவெகுகாலமிருக்கவும் யதிச்ரேஷ்டரிடத்தில்
தப்பெண்ணங்கொண்டு தனித்துப்பார்க்கவும்

5. முன்னிங்கிருந்த மூலபுருஷனும் இவரன்றுயெனவே
தன்னில்சந்தேக மடைந்தார்கள்தானும்

6. மாசம்மும்மாரி மழையும்பொழியவே யந்ததேசத்துள்ளோர்
ஈசனென்றுயெல்லோரும் மொழியவே. [கள்

7. வித்தையுமந்த வாய்மையுந்திபும் கண்டார்களமைச்சர்
மெத்தவும் விரைவாகப்பேசியும்

8 அந்தப்புரத்துஸ்திரீகளும் மப்போ அமைச்சர்களுடனே
இந்தச்சேதியை யெடுத்துரைத்திப்போ

9. ராஜன்செய்திடும் லீலையையோர்ந்தால் நம்மன்ராஜனல்லவென்
மோசம்போலேவே தோணுதுபார்த்தால் [றும்

10. ராஜனொருஸ்ரீங்கார சதகத்தை ரமணீயமாகவே
மோசம்செய்யவே மொழிந்திட்டாரத்தை

11. அதினுலேயிவராரோதெரியாது அதற்காகநீங்களும்
அதிகஜாக்கிரதையாயழைப்பது

12. பெங்கெங்கே சவமிருந்தபோதிலும் எடுத்துக்கொளுத்தியே
இங்கேவருகயிடுங் கட்டளையிலும்.

3. ரஜ்ஜுவில்தோற்றுகின்ற மித்யாசர்ப்பத்தைப்போலே
இஜ்ஜகங்களனைத்தும் யிருக்கும்ஸ்வரூபத்திலே (தத்வமஸி)

4. சச்சித்சுகமாகிய சாச்வதஸ்ரூபம் நீர்
அச்சமில்லையிதற்கு அதனையறிந்திடும் நீர் (தத்வமஸி)

5. ஸித்தரின்விதம்சொல்ல ஸிம்மாசனத்தில் நின்றும்
அத்தனைபேரும்பார்க்க அவ்விடம்விட்டகன்றும்தத்வமஸி

6. ஓடிப்போயவிடத்தில் உடலைக்காணுமல்வாடி
தேடிவரும்பொழுது ஐனதயிலுடலைநாடி (தத்வமஸி

## ஆசார்யர்தன் சரீரத்தில் ப்ரவேசித்தல்.

---

விருத்தம் 45.

உடலைமுன்வைத்துப்போகி ஊர்வெளிதன்னிலுள்ள
சுடலைக்குக்கொண்டுவந்து ஐனதயில்வைத்திட்டப்போது
மடமையால்நெருப்புமிட்டு மண்டியேயெரியும்போது
தடையொன்றுமின்றியாசான் தானுமவ்வுடல்புகுந்தார்.

தரு இராகம், ஸ்ரீராகம். 44

பல்லவி.

அரசனுடலை விட்டாரப்போதே புரப்பட்டா
ரானந்தபரிதமுற்றார்.

அனுபல்லவி.

ஸ்திரசௌக்கியமில்லாத சிற்றின்பமென்றுயெண்ணி
நிரதிசயானந்தமே நிரந்தரமென்றுநண்ணி (அரசனுட)

சரணங்கள்.

1. முன்னைதன்னுடல்தன்னை மூடிவைத்தகுகையில்
பின்னிவர்பார்க்குகையில்
சொன்னவுடலுமங்கே தோன்றுமலிருக்கையில்
யென்னசெய்யிவோமென்று யோசித்துயிருக்கையில்

2. நிரும்பிவக்ஷேத்ரீடத்தில் ஜைதயிலிருக்கக்கண்டு
பரபரப்புடனேசென்று
உருவதனில்புகுந்து உடனேநடுக்கங்கொண்டு
கரங்களெரிந்ததென்று கலக்கினர்மிகவிண்டு (அரசனுட)

3. இதுக்கென்னசெய்வோமென்று யேங்கிமனதில் நொந்து
பதைத்ததுஉடலும்வெந்து
அதிப்ரீபத்துடனவர் அங்குஸ்தோத்ரம்புரிந்து
மதியில்நரஸிம்மரை மறவாமலேபுகழ்ந்து. (அரசனுட.)

## லக்ஷ்மீ நரஸிம்ம ஸ்தோத்ரம்.

---

விருத்தம். 46

ஸ்ரீரலக்ஷ்மிநரஸிம்மத்தை சிந்தையில்த்யானம்செய்து
மூலமாய்த்துதிக்கும்போது முன்னிலேவந்துஅந்தக்
காலையில்கரமும்தந்து களிப்புடனுப்திசென்று
ஆவிலைமேலேநானும் அமர்ந்தனர்அந்தநேரம்.

தரு-இராகம்-மத்யமாவதி 46.

பல்லவி.

லக்ஷ்மீநரஸிம்மமூர்த்தியே என்கரந்தன்னை
ரக்ஷித்திடுவாய் சேர்த்தியே. (லக்ஷ்மி)

அநுபல்லவி.

பக்ஷிவாகனமேறும் பரமபுருஷா நீரும்
இக்ஷணம் தன்னில்வந்து யிடரனைத்தையும் தீரும் (லக்ஷ்மி)

சரணங்கள்.

1. க்ஷீரசாகரம்தன்னில் சேஷன்மேலேபடுத்த
காரணப்பொருளென்று கண்டுபக்தரடுத்த
பூரணஸ்வரூபமே புகழ்ந்துகரம் கொடுத்த

நாரணனுமையன்றி நமக்குவேறில்லை பார்த்தால்
ஆரணங்கள்தேடும் அவ்வுருவங்கூடும்
ஸாரங்கமும்நீடும் சக்கரக்கையோடும் (லக்ஷ்மி

2. பரமபுருஷரென்று பக்தர்களனைவரும்
பரிவுடனேதேடி பஜித்துக்கொண்டிருப்போரும்
நிரதிசயானந்தம் நிலைத்திட்டபெரியோரும்
அருமையாகவேசேரும் அந்தஸ்வரூபம்நீரும்
பெரிதுசிறிதற்று பேதமொன்றுமற்று
குறிபுங்குணமற்றுக்கொள்கையொன்றுமற்று (லக்ஷ்மி)

3. அந்தகாரமான ஆரண்யநடுவிலே
சிந்தையாகிறவ்ருக்ஷம் த்ருடமாய்வளரயிலே
மந்தமதியினாலே மயங்கப்போகிறபதிலே
சந்ததமுங்களிக்கும் சத்யமென்றெண்ணத்திலே
நொந்துமயங்கியே சிந்தைகலங்கியே
பந்தமுமாகியே வந்தவனாகியே (லக்ஷ்மி)

4. ஆதியிலும்மிடத்தில் அதிகத்வேஷத்தினாலே
தாதையானஹிரண்யன் செய்த அன்யாயத்தாலே
ஸ்ரீதரநாமத்தைச் செப்பும் ப்ரகலாதனாலே
மாதவாதூணிலப்போ மகிழ்ந்துதித்ததினாலே
சாதுக்களிடத்தில் செய்யுமன்பினாலே
நாநாகரமதாரும் நமக்குக்ருபையாலே (லக்ஷ்மி)

5. இங்கிவர்துதித்திட பெரக்கமுடனேவந்து
தங்கரத்தினாலேயே தடவியவர்கைதந்து
அங்கேமறைந்துபோனார் அவர்கள்நன்றாயறிந்து
சங்கையுடனேயவா தங்களிடங்கள்சேர்ந்து
பொங்கிப்புகழ்ந்திங்கே போகவினைத்தங்கே
சங்கரனுமங்கே ஸரஸவாணியெங்கே (லக்ஷ்மிநரஸிம்ம)

## வாணியைஜயித்து ஸ்ரீங்ககிரியிலிருக்கும்படி கேட்குதல்.

---

விருத்தம். 47

ஸ்வாமியுமறைய அங்கே சங்கரர் மனமகிழ்ந்து
காமசாஸ்த்ரத்தில்சங்கை கேட்டவவ்வாணியோடு
நாமிதுசொல்வோமென்று நினைத்துத்தன் சிஷ்யரோடே
தாமதிக்காமலந்த ஸரஸவாணியைப்போய்க்கண்டார்

தரு-இராகம்-கமாசு.

பல்லவி.

ஸ்வாமிமறைந்தபின் சங்கரர்நினைந்தார்
ஸரஸவாணியைக்காணஸ்வாமி. (அந்த)

அநுபல்லவி.

பூமிமுழுதிலேயும் புகழைப்பெற்றவரிந்தக்
காமசாஸ்த்ரத்தில்தன்னை கலங்கச்செய்துவளந்த. (ஸ்வாமி)

சரணங்கள்.

1. அந்தரக்ஷஸ்வர்க்கங்கள் அகிலமுழுதும்தன்னைச்
சொந்தமாகப்பார்த்தவர் துரையுடனேபின்னை (ஸ்வாமி)

2. மாயுஷ்மதிபுரத்தில் வந்துமிவரும்நின்று
தாயானவாணிசெய்த சங்கையையிவர்வென்று (ஸ்வாமி)

3. அப்பொழுதந்தவாணி அதிசயத்துடன்கண்டு
இப்பொழுதேபோகவே யெண்ணமனதில்கொண்டு ()

4. பூமியைவிட்டுவாணி புறப்படும்சமயத்தில்
காமதம்செய்யாமலே சங்கரரும்மனதில் (ஸ்வாமி)

5. ஸ்ரீங்ககிரியில்போடும் சிறப்பானபீடத்திலே
மங்கையேவந்துநீயும் மகிழுமவ்விடத்திலே (ஸ்வாமி)

6. வாணியும்சம்மதித்து வையகம்தன்னைவிட்டு
சேணிலேபுறப்பட்டு சென்றான்தன்லோகம்மட்டும் ()

## மண்டனமிச்ரருக்கு ஸந்யாஸம் கொடுத்தல்.

---

விருத்தம். 43

தேவிபோய்மறைந்தாளென்று தெரிந்தபின்னவருமங்கே
ஆவியோடுடலையெல்லாம் அவருக்கேயர்ப்பித்தப்போ
சாவகாசம்செய்யாமல் ஸந்யாஸாச்ரமத்தையெல்லாம்
தாவென்றுசொல்லித்தானே சகலத்தேன்த்யாகம்செய்தார்

தரு-இராகம்-காம்போதி.

பல்லவி.

ஸந்யாஸஉபதேசம் செய்துவென்னையிப்போ
தந்யனாகச் செய்திடும்

அநுபல்லவி.

விந்யாஸத்துடனந்த விபரங்கள்முறைமையும்
சொன்யாயத்துடன்சொல்லி ஸ்வரூபத்தின் ஸ்திதியையும்

சரணங்கள்.

1. மண்டனமிச்ரனை மாயுக்ஷமாயுரவாசி
விண்டவார்த்தையதனைக்கேட்டு விச்வாசமாய்ச்சன்யாசி
கொண்டகோலம் போலேயே கொடுத்தார்மிகவிச்வாசி
தொண்டனிவனென்று துணிந்தாரஸ்வபேதசி (ஸந்)

2. மகாவாக்யஉபதேசம் மகிழ்ச்சியுடனேசெய்து
அகண்டாகாரமாக அவரையிருக்கச்செய்து
அகம்ப்ரம்மமென்பதாக அநுஸந்தானமும்செய்து
ஏகமாயிருவென்று சொன்னார்தயவுசெய்து (ஸந்யா)

3. ஆசார்யஸ்வாமிகளும் அப்பொழுதவருக்கு
ஸுரேசீனயாசகரு ஸுரேச்வரப்பெயருக்கு
நேசமாகவேயவர் நடந்துகொள்ளுவதற்கு
வாசமாய்தன்னிடத்தில் வாழ்ந்திருக்கிறதற்கு (ஸந்யா)

## தக்ஷிணிதேசத்திற்கு ப்ரயாணமாய் வரும்போது மத கண்டனம்.

விருத்தம். 49

மண்டனர்க்குச்சன்யாசம் மகிழ்ந்துதான்கொடுத்தபின்பு
பண்டுள்ளசிஷ்பரோடும் ப்ரயாணமாய்த்தென்திசைக்கிக்
கண்டிக்மதத்தையெல்லாம் களிப்புடன்வருகும்போது
உண்டானமதக்கோட்பாட்டைஉண்மையாய்த்துறக்கிரும்.

தரு-இராகம்-ஸ்ரீராகம் 48.

கண்ணிகள்

1. மாயுஷ்மதியைவிட்டு மண்டனர்முதலான
தூயசிஷ்பருடனே நடந்தாரே

2. தென்திசைபதைநோக்கி தேசாந்தரம்போகவே
யிந்தசங்கரரங்கே யிசைந்தாரே

3. வரும்வழிதன்னிலுள்ள வாதபேதத்தைவென்று
திரும்பியூர்களெங்கும் திரிந்தாரே

4. அதில்தலைவர்களான அவர்களையும்ஜயித்து
அதிசயத்துடனெங்கும் சென்றாரே

5. இப்படியிவர்சென்று யிஜ்ஜகமனைத்தையும்
தப்பில்லாமலிருக்கச் செய்தாரே

6. அத்வைதமதந்தன்னை அங்கங்கிலும்ஸ்தாபித்து
சுத்தமாய்மதக்காரைத் துலைத்தாரே

7. சைவமதங்களென்றும் பாசுபதங்களென்றும்
சைவசம்செய்தவரைக் கழித்தாரே

8. வைஷ்ணவமதமென்றும் பாஞ்சராத்திரமென்றும்
வைஷ்ணவாசொல்வதையும் வதைத்தாரே

9. வைகானஸமதத்தை வழிதெரியாமலோட்டி
மைகாரைவாயுபோலே மடித்தாரே

10. ஹிரண்யகர்ப்பமதத்தை யில்லாமலேகெடுத்து
பரிவுடன்பார்முழுதும் திரிந்தாரே

11. அக்னிவாதிமதத்தை யங்கங்கேநாசம்செய்து
விக்னமன்றியிவர் திரிந்தாரே

12. ஸௌரமதங்களெல்லாம் தலைகெட்டுபோகச்செய்து
கௌரவத்துடனவர் இருந்தாரே

13. மகாகணபதிமத மயக்கங்களைஜயித்து
அகமகிழ்ந்தவரிங்கே நிலைத்தாரே

14. ஹரித்ராகணபதியின் அழகானமதந்தன்னை
துரையுடனேஜயித்து ஸாதித்தாரே

15. உச்சிஷ்டகணபதி உயர்வானமதந்தன்னை
மிச்சமில்லாமலிவர் கெடுத்தாரே

16. நவநீதகணபதி நலமானமதந்தன்னை
அவமென்றுரைநொடியில் அழித்தாரே

17. ஸ்வர்ணவர்ணம்தரித்த சுத்தகணேசன்மதம்
நிர்ணயமல்லவென்று தீர்த்தாரே

18. ஸந்தானகணபதி சாச்வதமதந்தன்னை
வெந்துநீராய்ப்போக வதைத்தாரே

19. சக்திமதத்தையிவர் வ்யர்த்தமாகக்கெடுத்து
முக்தியதல்லவென்று முடித்தாரே

20. மகாலக்ஷ்மிமதம் தன்னை மடியும்படியடித்து
வெகுசிஷ்யருடனிவர் மகிழ்ந்தாரே

21. ஸரஸ்வதிமதம்தன்னை சடுதியாகவேவென்று
உறுதியுடனேயிவர் உகந்தாரே

22. வாமாசாரமதத்தை வகையுடனேகெடுத்து
தாமாகஉலகெங்கும் தழைத்தாரே

23. சார்வாகமதத்தையும் தலைபெடுக்காமல்செய்து
ஊர்வழியாகத்தாமும் திரிந்தாரே

24. காபாலிகமதத்தைக் காணாமலேதுறத்தி
பூபாலன்போலயிவர் புகழ்ந்தாரே

25. சௌகதமதங்களைச் சடிதியாகவேவென்று
ஔபநிஷத்மார்க்கத்தை யளித்தாரே

26. ஜைனமதங்களெல்லாம் ஜயித்துசங்கரர்தாமும்
மௌனமாகவேயிங்கே மகிழ்ந்தாரே

27. பௌத்தமதத்தையவர் பொட்டியெரிந்துவிட்டு
ஸ்ரௌதசத்தமதமசாரியென்றாரே

28. மல்லாரிமதம்தன்னை யில்லாமலேகெடுத்து
யெல்லாவிடங்களிலும் இருந்தாரே

29. விஷ்வக்ஸேனமதந்தை வ்யர்த்தமாகவேசெய்து
அத்வைதமதம்தன்னை யமைத்தாரே

30. மன்மதமதம்தன்னை மரித்தெழாமலேகொன்று
தன்மயமாகவே தழைத்தாரே

31. குபேரமதம்தன்னைக் குத்திஎரிந்துவிட்டு
அபாரமாகவே அமர்ந்தாரே

32. இந்திரன்மதம்தன்னை யில்லாமலேவென்று
யெந்தவேளையும்தானு யிருந்தாரே

33. யமமதமதுதன்னை யெளிதாகவேஜயித்து
அமர்ந்துஆத்மசுகத்தில் இருந்தாரே

34. வருணன்மதம்தன்னையும் வருசைபுடனேபோக்கி
நிருவாணசுகத்திலே நின்றாரே

35. சூன்யமதவாதியைத் தூளி தூளியாய்ச்செய்து
வான்மயமாகத்தானும் வாழ்ந்தாரே

36. வாராகமதம்தன்னை வாராமலேகெடுத்து
பூரணஸ்வரூபமாய்ப் புகழ்ந்தாரே

37. சாங்க்யமத்தையிப்போ தலையெடுக்காமல்செய்து
ஓங்கிஉன்னதமாக வொளிந்தாரே.

38. யோகமதத்தையிப்போ ஒடும்படிக்கிச்செய்து
யேகரஸமாகவே யிருந்தாரே.

39. கர்மமதத்தையவர் கலங்கும்படிபடித்து
நிர்மலமாகவே நிறைந்தாரே.

40. சந்திரன்மதம்தன்னை க்ஷணத்தில்நாசமாய்ச்செய்து
மந்தஹாஸத்துடனே மகிழ்ந்தாரே.

41. க்ஷபணகமதம்தன்னைச் சந்ததமும்ஜயித்து
தபசிபோலேயவரும் சரித்தாரே.

42. பிதுரார்மதத்தையெல்லாம் பீதியன்றியில்வென்று
அதிஸுகமாகவே யமைந்தாரே.

43. வித்தமதத்தையெல்லாம் சிறப்புடன்னிரவித்து
சுத்தப்ரம்மாகவே ஸுகித்தாரே.

44. கந்தர்வமதங்களை காணாமலேயொழித்து
சிந்தைகளித்துந்தானும் சிறந்தாரே.

45. பூதவேதாளமதம் போகும்படிக்கிக்கொன்று
வேதமார்க்கத்தையென்றும் விரித்தாரே.

46. காபாலிகனும்வந்து கண்டுஅவருடனே
ஆபத்தானவார்த்தையைச் சொன்னானே.

47. இந்தமதங்களெல்லாம் இவ்வுலகிலேயாரும்
சிந்தைசெய்யாமலே தெளிந்தாரே.

## காபாலிகன் ஆசார்யார் சிரமருக்கக் கேழ்க்குதல்.

விருத்தம். 50

காபாலியென்று சொன்னேன் கபடமாய்வேஷம்பூண்டு
பூபாலன்போல் திரிந்த புண்ணிய மூர்த்திதன்னை
ஆபத்தைவிளைப்பதான அவ்வேலைசெய்யும்போது
ஸ்ரீபதியவன்சிறத்தைச்சிச்சேதம் செய்தார்தானே.

தரு—இராகம்-உசேனி. 49

கண்ணிகள்

1. தர்மதங்களைத் துறந்தியே யாசான் தலைக்கும்பொழுதிலே
வர்மத்துடனே வந்தானொரு மோசன்

2. ஸ்வாமிசரணம்சரணமென்றவன் சடிதியிலேயெனக்குத்
தாமதிக்காமல்தயையைச் செய்யென்றான்

3. என்னென்றுகேட்டாலெடுத்துக்கூறுவேனென்னிஷ்டப்படியே
முன்னொருகாலம் முயர்ச்சிசெய்துநான்

4. ஈசனைவேண்டித்தவம்புரிகையில் என்னிடத்திலேயந்த
ஈசனும்வந்து யிருந்துசொல்லையில்

5. என்னைக்குறித்துயேன் தவம்செய்தா யதையிசைத்திடுமென்று
சொன்னயீசர்க்குச்சொல்லினேன் துணிவாய்

6. இவ்வுடலுடனே கையிலைப்போகி யிருக்கும்படிக்கொரு
திவ்யவரத்தைத்தந்திட்டுமேகி

7. போவென்றுநானும் புகலும்போதிலே யந்தப்பரமசிவனும்
சாவதானமாய்த்தயவதினாலே

8. சக்ரவர்த்தியின் சிரசையாவது யென்பெயரைச்சொல்லியே
உக்ரபைரவர்க்கிடுபலியது

9. அகப்படாவிட்டாலதற்குச்சரியாகவொரு சர்வக்ஞாத்மாவை
வாகமுடன்கொடுதுணிந்து பலியது

10. என்றுசொல்லியே யீசன்போனபின் எங்கெங்கும்தேடியும்
இன்றுவரையில் அகப்படாமல்பின்

11. தெய்வகதியாய்த் தெரிந்ததுவும்மை தேடாமலேயிப்போ
செய்வைக்கிருபையை சீக்கிரத்தும்மை

12. மிகவும்வணங்கி மீட்டும்கேழ்க்கிறேனென் மனதபிஷ்டத்தை
வகையாய்கொடுத்துவைத்தால் வாழ்கிறேன்

13. தயைக்கிருப்பிடமான மூர்த்தியே யென்தளர்ச்சியைக்கண்டு
உபாயெடுத்து உந்தரிப்பையே

14. உலகத்துக்குபகாரமாகவே உதித்திட்டநீரும்
கலங்கினேன்றோர்களைக் கடைக்கண்பார்க்கவே

15. வேணும்வேணும்நீர் விடப்படாதென்னை விட்டாலுமுமக்குக்
காணவேண்டியதொன்றில்லைப்பின்னை

16. தேகமென்கிற அபிமானம்விட்ட தயாபரரே நீர்
சாருக்காகவோ தயைகளைவிட்ட

17. ஆகையாலே நீரருக்கச்சிரம்தந்து அன்போடே என்னையும்
மோகத்தைவிட்டு மாற்றிடுமறிந்து

18. என்றுகேழ்க்கவு மிறங்கிதயையோடே யேகாந்தமாகநான்
நின்றிடும்போது நீயறுத்திடே

19. என்றவனுக்கு யிவ்விதம்மாக ஆசானுமுரைத்து
நின்றனரவர் நிர்விகல்பமாக.

## காபாலி சிரமருக்க எத்தனப்படும்போது நரவிம்மரவனைக் கொல்லுதல்.

---

### விருத்தம். 51

ஏகாந்தஸ்தலத்தி லாசானிருக்கவும் நிஷ்டைதன்னில்
சாகாஸன் கபாலிகையில் கத்தியையெடுத்துக்கொண்டு
வேகமாயோடிவந்து வேளையிதென்று எண்ணித்
தாகமாயோங்கும்போது ஸ்வாமி வந்தவனைக்கொன்றார்.

தரு-இராகம்-காம்போதி 50.

பல்லவி.

நிர்விகல்பமான நிஷ்டையிலேயிருந்து
சர்வக்ஞர் மிகப்புகழ்ந்து.

அநுபல்லவி.

சர்வப்ராணிகளும் தன்மயமாய்த்தோணும்
நிர்வாணப்பதத்திலே நின்றனரவர்காணும் (நிர்)

சரணங்கள்.

1. தானென்றும் பிறனென்றும் சந்தேகமில்லாமல்
ஆனந்தவடிவான அந்தச்சமாதியில்
ஈனமுச்சமில்லாமல் இருந்திடும்வேளையில்
தோனினான்காபாலி துறையாய்க்கத்தியுங்கையில். (நிர்)

2. அவரிருக்குந்தன்மையை யடுத்துக்கபாலிபார்த்து
இவரைப்பலிகொடுக்க இதுவென்றுதகிபார்த்து
அவனுங்கையில்கத்தியை யருஷத்துடனெடுத்து
புவனம்நடுங்கும்படிப் போட்டெத்தனித்து. (நிர்)

3. தூரத்திலேயிருந்தும் தூயபத்மபாதருக்கும்
ஆரியன்சிரந்தன்னை அறுக்கும்கபாலிக்கும்
வேறுசெய்யக்கூடாமல் விக்கியவரிருக்கும்
நாரஸிம்மனுதித்தார் நடுங்கக்கபாலிக்கும். (நிர்)

4. அந்தவேளை தன்னிலே யாரவாரத்துடனே
வந்தநாரஹரியும் வாளிநுக்ரத்துடனே
இந்தக்கபாலிகனை யிழுத்துநகத்துடனே
சந்துசந்தாய்க்கிழித்தார் தானேகோபத்துடனே. (நிர்)

5. முன்னொருகாலத்தில் மூர்க்கனானஹிரண்யன்
சொன்னத்வேஷத்தினாலே தோன்றினான்ப்ரஹலாதன்
அன்னவனுக்காகவே அவனைக்கிழித்த அவன்
பின்னைச்சங்கரர்க்காக புகழ்ந்துவந்தானிங்கிவன்

6. ஆரவாரத்துடனே அரையும்சப்தந்தைக்கேட்டு
கூறும்சமாதிதன்னை கொஞ்சம்கொஞ்சமாய்விட்டு
நேரில்வெளியில்வந்து நிற்கின்றவரையிட்டு
பூரணமாய்ஸ்திதி புகழ்ந்திவர்செய்திட்டு. (நிர்)

7. அகன்றிருந்தசிஷ்யரும் அவ்விடத்திலேவந்து
புகன்றார்களிதுவென்ன புதுமையென்றுமகிழ்ந்து
மகத்தானப்ரியத்துடன் மதித்துமிவர்கள்சேர்ந்து
பகையைவென்றவிபரம் பத்மபாதரேயோர்ந்து. (நிர்)

8. உரையுமென்றிடும்போது உடனேபப்பத்மபாதர்
அரைவர்நாமமெல்லோரும் அங்கேயிருக்கஅவர்
சிரசைக்கொய்வதாக சிந்தனைதோன்றயிவர்
சரணம்தானேகதி சேரவேரில்லையுயிர். (நிர்)

9. ஒன்றும்தோன்றாமலே உறக்கம்போலிருந்தேன்
நன்றுவிழிக்கும்போது நரஹரிதனைக்கண்டேன்
சென்றொருகாலத்தில் சிரக்கத்தவம்செய்தேன்
அன்றளித்தவரத்துக் காகவந்தாரென்றோர்ந்தேன். (நிர்)

10. இதுகேட்டசிஷ்யர்களும் யிஷ்டமாய்குருவுக்கு
ஹிதம்செய்தயிவர்தன்னை யெல்லோரும்புகழ்தற்கு
மதிமானாகியபத்மபாதரும் அவர்கட்கு
இதுபோருமென்பதாக யிசைத்தனரெல்லவர்க்கும். (நிர்)

11. ஸ்ரீகுருசரணத்தில் சிஷ்யர்களனைவரும்
தாகத்துடன்பணிந்து சந்தோஷமாயவரும்
போகுமிடங்களுக்கு போவோமென்றாரிவரும்
ஸ்ரீகுருயிதுகேட்டு சென்றார்தென்றிசையாரும். (நிர்).

## தக்ஷிணதிக்குவரும்போது ஹஸ்தாமலகர் சிஷ்யராதல்.

விருத்தம் 52.

மாணாக்கருடனேயாசான் மகிழ்ந்துதான்வரும்போதங்கே
கோணமல்கோகர்ணத்தைக் குறிப்பினாலடைந்தார்சித்து
ஆணவமடைந்ததுஷ்ட மதங்களையழித்துக்கொண்டு
சேணுருபோலேதானும் சென்றார்முகாம்பாள்கோயில்.

தரு-இராகம்-ஆரபி. 51.

பல்லவி.

சிஷ்யவர்க்கத்துடனே சென்றார் ஸ்ரீகுருநாதர்
தென்திசைநோக்கியேயவர்.

அநுபல்லவி.

சிஷ்யபரிபாலனம் செய்வதின்பொருட்டாயும்
துஷ்டமதவாதியைத் தொலைப்பதின்பொருட்டாயும்

சரணங்கள்.

1. தென்திசைநோக்கியிவர் திரும்பிடும்சமயத்தில்
வந்ததுஷ்டவாதியை வதைத்துக்கொண்டவிடத்தில்
சிந்தைதெளிந்துவந்தார் சிறப்பாய்கோகர்ணத்தில்
மந்தகாசமாய்மகா பலேசுவரசமூகத்தில்
தொந்தவங்களிறந்த ஸ்வரூபானந்தசுகத்தில்
எந்தவேளையும் நின்றேகாசப்பதத்தில். (சிஷ்யர்)

2. கோகர்ணேச்வரர்தன்னைக் குறிப்பாகபூஜைசெய்து
ஆகமரகஸ்யத்தை யங்கேஸ்தாபனம்செய்து
யேகபோகமாகவே யெப்பொழுதும்கானுய்து
வேகமாய்புறப்பட்டு வரும்வழியிலழுது
சோகத்துடன்தம்பதி தூக்கித்திடும்பொழுது
தாகம்தணியும்படி தனயனையெழச்செய்து. (சிஷ்யர்)

3. அதற்குமேல்மூகாம்பிகை அழகானசந்நிதியின்
எதிரில்போயவர்நின்று யிஷ்டப்படிஸ்தோத்திரத்தின்
ஸ்துதியெல்லாமிப்பொழுது சொன்னார்ஸொஸ்வரூபத்தி
கதியாகுமென்பதாகக் கண்டோர்கள்மன்னத்தின் [ன்
விதியென்றும்வித்வத்ஜனம் விண்டிடும்மந்திரத்தின்
நிதியாகும்யோகியர்கள் நிகழ்த்தும்யோகமதத்தின். ( )

4. அம்மன்க்ருபையைப்பெற்று அவ்விடத்திலிருந்து
இம்மஹாபுருஷரும் இஷ்டமாகவேவந்து

கம்மனுக்ரகத்தாலே சகலருமேமகிழ்ந்து
சும்மாயிருக்கவேண்டும் ஸுகமாகவென்றறிந்து
தம்மொழியதைக்கேட்டு தளர்ச்சியறவிருந்து
இம்மகத்பதத்திலே எல்லவரும்நிரைந்து. (சிஷ்யவர்)

5. ஸ்ரீபலியென்றவொரு சிறப்பாமக்ரகாரத்தில்
ப்ரபாகரரென்றிடும் பிராம்மணர்தன்னிடத்தில்
சோபானக்ரமமென்று சொல்லுமகர்ம்கர்ண்டத்தில்
வ்யாபாரமதுவாக வாழ்ந்துவரும் காலத்தில்
பூபதிபோலேயெங்கும் புகழும்பாக்யவர்க்கத்தில்
ஸ்ரீபதிபோலேயவர் திகழ்ந்தாரந்தக்ராமத்தில் (சிஷ்யர்)

6. புத்திரவர்க்கத்தோடும் போனார்தம்பிகளும்
அத்தனைக்ஷேத்திரங்களும் அடைவாகயிவர்களும்
சுத்திவரும்பொழுது சொன்னயமுனையிலும்
உத்தமயோகியிடம் ஒப்பித்துக்குழந்தையும்
தத்திவிழுந்துபாலன் சாகும்போதவர்களும்
மெத்ததுயரப்பட விழித்தவர்பாலனையும். (சிஷ்யர்)

7. ஜீவனுடனேதந்தார் சீக்கிரமாயிவரும்
மேவித்தங்களுடைய மேலானக்ராமத்திலும்
சாவதானமாகவே தாங்கள்சென்றிருக்கவும்
ஜீவித்தனைமந்தனொரு செயலுமற்றதாகியும்
பாவனைகளிறந்த பதம்பெற்றவர்போலும்
தாவும்மனக்கவலை செய்கையொன்றில்லாமலும். ()

8. எட்டுவ்ருஷமாக யிவனுடைதந்தைதானும்
சிஷ்டருமுபனனம் செய்துவைத்தவர்தானும்
கஷ்டத்துடனிருக்கும் காலத்தில்சங்கரரும்
இஷ்டத்துடனேவந்தார் இந்தக்ராமந்தன்னிலும்
நிஷ்டையிருப்பவர்போல் நின்றபாலனுடனும்
வெட்டவெளியாகவே வந்தான்ப்ரபாகரனும். (சிஷ்ய)

9. தானும்நமஸ்கரித்து தனையனைகீழேதள்ள
தோனவிறந்தபாலன் ஸாகமாகவேமெள்ள
ஆந்தாகாரமாக அவ்விடத்திலேயுள்ள
தானசெயலைக்கண்டு ஆசாரியரும்விள்ள
த்யானகுறிப்பினாலே தெரிந்துயிவனைக்கொள்ள
யினமில்லாதயார்நீ யெடுத்துரைக்கச்சொல்ல. (சிஷ்ய)

## ஹஸ்தாமலகர் அனுபவம் சொல்லுதல்.

விருத்தம். 53.

யாவிலும்நிறைந்தஜோதி யாகியஸ்வரூபம் நானே
ஜீவபாவங்களற்ற சித்கனஸ்வரூபம் நானே
பாவனையிறந்து நின்றபரிபூர்ணஸ்வரூபம் நானே
தேவர்களனைவர்கட்கும் தேவனாயிருப்போன் நானே.

தரு—இராகம், இந்துஸ்தானி. 52

கண்ணிகள்.

1. பரிபூர்ணமாகவேபார்ப்பதும் நானே
நிருவிகாரமாகநிற்பதும் நானே.

2. அம்பரம்போலேயகன்றதும் நானே
ஸ்தம்பப்ரம்மாதிகள் சர்வமும்நானே.

3. நித்யசுத்தமுக்த நிர்க்குணம் நானே
ஸத்யஞானாநந்த சாச்வதம் நானே.

4. தேகமிந்திரியப்ராணனில்லாதும் நானே
ஸோஹம்பாவனையாக ஸாகிப்பதும் நானே.

5. மனம்புத்தியகங்காரமற்றதும் நானே
கனமாகஅனேத்திலும் காண்பதும் நானே.

6. அஜ்ஞானகார்யங்களல்லாதும் நானே
விஜ்ஞானகனமான விளக்கமும்நானே.

7. ஜீவபாவங்களற்ற சின்மயம் நானே
யாவிலும்மொளிர்ந்திடும் த்வைதம்நானே

8. பாவனைக்கெட்டாத பரப்பிரம்மம்நானே
தாவும்மனதொழிந்த ஸமரஸம்நானே

9. ஜோதிக்கும்ஜோதியாய் ஸுகிப்பதும்நானே
வேதவேதாந்தத்தின்விளக்கமும் நானே

10. ஆதியந்தமில்லாதக்ஷரம் நானே
பேதாபேதமற்றப்ரம்மமும்நானே

11. ஸச்சிதானந்தமானஸ்வரூபமும் நானே
நிச்சலாகாரமாகநிர்ப்பதும் நானே

12. எங்கும்பரிபூர்ணமாயிருப்பதும் நானே
அங்கேயங்கே விளங்குமாத்மாவும் நானே

13. அனந்தகடஜலத்தில் அருக்கன்போல் நானே
தனித்தனியாகியஸ்வரூபமும் நானே

14. பந்தமோக்ஷமற்ற பரப்பிரம்மம் நானே
பெந்தவேளியும் தானுயிருப்பதும் நானே.

## அனுபவத்தைக்கேட்டு ஹஸ்தாமலகப் பேர்தந்து அனுக்ரஹித்தல்.

விருத்தம். 54.

அப்படியுரைக்கக்கேட்டு அவனுக்குஸன்யாஸத்தை
யிப்பவேகொடுத்து யெந்தனிஷ்டமாம் சிஷ்யனென்று
ஒப்பில்லா அனுபவத்தை வுள்ளங்கைநெல்லிபோலே
செப்பியவுனக்குஹஸ்தாமலகனென்றொரு பேர்தந்தேன்.

தரு, இராகம், பைரவி. 53

பல்லவி.

அனுபவமுரைத்திட்ட அக்குழந்தையையிவர்
ஹஸ்தாமலகரென்று அழைத்தாரே.

அனுபல்லவி.

விநயத்துடனுரைத்த வார்த்தைமுழுதுங்கேட்டு
அனவரதமுமவர் அப்படியிருக்கட்டும் (அனுபவமுறை)

சரணங்கள்.

1. சங்கையில்லாமல்தானுய் சந்ததமிருக்கின்ற
மங்களகரமாக மகிழ்ந்துதான்ஸுகிக்கின்ற
யிங்கொருபொருள்தானே யெப்போதுமிருக்கின்ற
அங்கைநெல்லியைப்போலேயதுவாகவிளங்கின்ற (அனு)

2. அந்தசிஷ்யனைப்பார்த்து ஆதரவோடழைத்து
சிந்தைமகிழ்ந்துநீயும் சிறப்புடனேஸுகித்து
எந்தவேளையும்தானுயிருவென்றனுக்ரகித்து
லொந்தஸுகத்திலிவன் துலங்கும்படிக்கிவைத்து (அனு)

3. சின்னக்குழந்தையான சிஷ்யவர்க்கத்துடனே
சொன்னவர்புறப்பட்டுச் சென்றார் துரையுடனே
அன்னஶ்ருங்ககிரிக்கி யாசானவருடனே
இன்னம்சிலதுசெய்ய வெழுந்தாரிஷ்டமுடனே (அனு)

## ஶ்ருங்ககிரியில் வந்துசாரதாபீட ஸ்தாபனம் செய்தது.

விருத்தம். 55

விபாண்டமாமுனிவன்மைந்தன் விரக்தனும்ரிஷியஶ்ருங்கன்
அபாரமாய்தவங்கள்செய்த அத்தலம்தன்னில்பின்னும்
தபவினுல்சித்திபெற்றார் ஸப்தமாமுனிவரங்கே
சுபமுடன்தேவர்மூவர் ஸுகிக்கும் ஶ்ருங்கேரிக்ஷேத்திரம்.

தரு, இராகம், கானடா. 54

கண்ணிகள்.

1. ஶ்ருங்ககிரியைநோக்கி சிஷ்யவர்க்கத்துடனே சங்கரர்
வருகையிலே அங்கேவிபாண்டமுனி அழகுடன்தபம்
செய்யும் ஆச்ரமமதிலே.

(சித்திரைபானுதிசை, உத்தராகிதும் கானடே)
(அத்தலே பனதுரைந்து)

2. விபாண்டமுனிவர்க்கு விரக்தியாயொருமைந்தன் அபார தபஸுடனே உபாயமன்றியிலே உறுதியாய்தபம்செய்த உத்தமன்ரிஷ்யஸ்ரீங்கனே

3. இவர்செய்ததபம்போலே யெல்லோரும்தவம்செய்துபவ முக்தியடைந்தாரே அவர்கள்யாரென்றுகேட்டாலடைவுட னவர்களின் அத்புதமிதுபாரே

4. காச்யபர்முதலான கனந்த ஸப்தரிஷிகள் விச்வாஸமாய் தவத்தை ரிஷ்யஸ்ரீங்கருடைய ஆச்ரமத்தில்தூர்வாசர் சிஷ்யருடனேதாபத்தை.

5 காட்டியேவஸிட்டற்குக் கடும்பசியாலே வெகுவாட்ட மாகுதுயிப்போது சாட்டியமில்லாமலே சடிதியி லன்னமிட்டால் சவுக்யப்படுவோமப்போது

6. என்றுமுனியுரைக்க யிதுகேட்டுவஸிஷ்டரும் நன்றென்று பத்னியுடனே இன்றுதூர்வாஸர் முதலெல்லாமுனிவர் கட்கும் இடவேண்டுமன்னமும்தானே

7. பர்த்தாவுரைத்தவார்த்தை பரிவுடனவள்கேட்டுஅர்த்த நொடியிலன்னத்தை கர்த்தன்கணவனுடை கட்டளைப் படியிட்டாள் கரிபருப்பன்னம் பக்ஷபத்தை

8. தூர்வாசரும்புசித்துத் துரையாய்சிஷ்யருடனேகர்வா கங்காரமடங்கி பர்வதாக்ரகுகைக்கி பயந்தும்போன சேதியை பகர்ந்தார் நாரதர்மயங்கி [குன்

9. வைகுண்டத்திலேவாழும் விஷ்ணுவுடனே சொல்ல வைகுண்டவாஸருடனே மைகாரும்மேகம்போலே மகத்தானகருடன்மேல் மகிழ்ந்துவந்தாருடனே

10. அருந்ததியுமன்னம்போலே அன்னம்படைத்தாளந்த தவரில்லாக்கணவன் சொல்லால் இவரன்னம்புஜித்திட்டு யித்தலத்திலேநின்றார் இன்னமும்நாரதர்சொல்லால்.

11. பரமசிவனுமந்தப்பார்வதியுடன்கூட வருமாறிக்
கிழவனுகி தருவாயமிர்தமென்று தமுர்ச்சியுடன்
சேழ்க்கையில் தந்தாள் தயவதுவாகி

12. ஸரஸ்வதிதேவியுடன் சதுர்முகனங்கேவந்து தரவேணு
மன்னமுமென்றுன் பரபரப்புடனவள் பரிமாரியன்
னமிட்டாள் பர்த்தாவின்மனம்போல்ச்சென்றுள்

13. மும்மூர்த்திபும்வஸிக்கும் மோக்ஷஸ்தலந்தன்னிமேல
யிம்மஹானவரும்வந்தார் தம்மால்கூடியமட்டும்
ஸ்ரீங்ககிரிமுழுதும் தேடித்தேடிக்கொண்டுவந்தார்.

14. எங்கேபார்த்தாலும்சாந்தி யெங்கேபார்த்தாலும்சாந்தி
தங்குதடையில்லாமலே அங்கங்கேயிருப்பதையழகுட
னவர்பார்த்து ஆனந்தம்மதிகத்தாலே [சிஷ்

15. இங்குதாமிருந்திட யிஷ்டங்கொண்டபொழுது அங்குள்ள
சிஷ்யர்களெல்லாம்சங்கையில்லாமலிங்கே ஸ்திரமாய்வஸிப்
போமென்றுர்ஸ்வாமிகேட்டாரிதுவெல்லாம்

16. துங்கபத்ராநதிக்கித் தூயவரொருதினம்தங்கப்போய்ரிஷி
களுடன் அங்குபேசும்பொழுது அவிடமொருதவளை
அரவினுல் காத்தவுடன்.

17. சாரதாம்பாள்கோயிலே சடிதியாயங்கேகட்ட ஆரியர்தலைப்
பட்டனர் ஆரவாரத்துடனே யசரீரிவாணிதானும்
அதுநமக் கிஷ்டமென்றனள்.

18. ஆசானுமதுகேட்டு அங்கேகட்டும் கோவிலில் வாசமா
யிருந்திடென்று வாசாமகோசரமாம் ஸ்ரீசக்ரம்தன்னை
யங்கே நேசமா யமைத்தாரன்று.

19. இதுதான் ஸ்ரீங்கேரிதன்னில் இப்பொழுதுமிருக்கும்
புதுசக்ரம்போலேயதுவும் நிதமும்விளங்கிக்கொண்டு
நிகிலஜனங்களுக்கும் நிகரில்லாமலேயதுவும்

20. அங்கொருமடம்கட்டி யந்தஸுரேச்வ்ரரைரு சங்கரிருக்கச் செய்தார் பொங்கிசிஷ்யர்களுடன் பூரித்துஅவிடத்தில் பஹுகாலம் அவரிருந்தார்.

## ஆனந்தகிரி சிஷ்யனுதல்.

---

விருத்தம். 56

ஆனந்தமாக ஆசானங்கிருந்திடுங் காலத்தில்
தானந்தவடிவமாகச் சந்ததமிருக்கக் கோறி
ஆனந்தகிரியென்றிட்ட அழகுள்ளநாமந்தாங்கி
ஈனமில்லாதசிஷ்யன் இவரிடம்வந்தானப்போ.

தரு, இராகம்-அடாணு. 55

பல்லவி.

ஆனந்தகிரியென்றோர் சிஷ்யன்வந்தான் அவர்
தானங்கேயானந்தமாகவே யிருந்தார். (ஆனந்த)

அநுபல்லவி.

வானமந்தரக்ஷம் பூமிமுழுதையும்
தோனலென்றறிந்து தொழுதாசனையும். (ஆனந்த)

சரணங்கள்.

1. எத்தனையோகோடி ஜன்மங்களாய் நாமும்
மெத்ததவம்செய்ததால் அது
உத்தமகுருவாயிப்போது வந்ததால். (ஆனந்த)

2. இவரேநமக்கு இஷ்டகுருவென்று
அவர்நினைத்துக்கொண்டு யெந்தன்
பவநாசம்செய்யப் பாரிலுருக்கொண்டு. (ஆனந்த)

3. இப்படிபக்தனு யிருக்கும்சிஷ்யனை
யெப்பவுமாதரித்தார் அவர்
தப்பிதமன்றியில் சத்குருவைப்பார்த்தார். (ஆனந்த)

4. பாதஸேவையினுல் பின்பந்தசங்கரர்
போதமுபதேசித்தார் அதை
ஆதரவாய்கேட்டு அன்புடன்துதித்தார். (ஆனந்த)

5. அஞ்சச்லோகத்தினுல் லாத்துமானந்தத்தை
யஞ்சாமலேயுறைத்தார் அவர்
சஞ்சலம்விடுத்து ஸ்வாமியைஸ்துதித்தார். (ஆனந்த)

6. கேட்டந்தசங்கரர் கெம்பீர்யவாக்யத்தை
ச்ரேஷ்டமென்றே புகழ்ந்தார்பின்பு
தோடகரென்றொரு தூயநாமம்தந்தார். (ஆனந்த)

7. செய்தயிவரோடே சித்ருஷையைக்கண்டு
கைத்தவமென்றெனவும் அவா
மெய்தானிவன்செய்யும் மேலாகியஅன்பும். (ஆனந்த)

8. ஆசானிவரிடம் அன்பைமிகவைத்து
நேசமாகயிருந்தார் அதைப்
பேசும்பொழுதெல்லாம் பின்னுள்ளோரறிந்தார். ( )

9. இந்தசிஷ்யர்க்கெல்லாம் இவர்மேலஸூயை
வந்ததைதானறிந்தார் அவர்
சிந்தித்துசிஷ்யனை சித்ரூபமாய்ச்செய்தார். (ஆனந்த)

10. பாஷியார்த்தத்துடன் பின்னுள்ளக்ரந்தங்கள்
வாசியாமல்வந்தது அவர்
நேசமாயிக்ரந்தடீகைகள் செய்தது. (ஆனந்த)

## ஸுரேச்வரரை வார்த்திகம் செய்யச்சொல்லுவதும், அதைத்தடுப்பதும்.

விருத்தம். 57

இப்படிவந்தசிஷ்ய ரிவர்களோ டிருக்கும்போதில்
சொற்படி நடக்குமந்த ஸுரேச்வரர்தனையும்நோக்கி
மெய்ப்பட பாஷ்யத்திற்கு வார்த்திகமுரையுமென்றார்
அப்பொழு தவர்களெல்லாம் அதுகூடாதென்றிட்டாரே.

தரு, இராகம்–கல்யாணி. (56)

பல்லவி.

வார்த்திகம்செய்யும் நீரென்றூர்வழியுடனே
வார்த்திகம்செய்யும் நீரென்றூர்.

அநுபல்லவி.

பார்த்தஜனங்களெல்லாம் ப்ரமைக்கும்படிக்கிநல்ல
வார்த்தையாகயிருக்க வஸ்துவதையும்சொல்ல. (வார்)

சரணங்கள்.

1. கேழ்க்கும் ஜனங்களுக்கெல்லாம் க்ரமமாயர்த்தம்
ஆக்கும்படிக்கி யுன்சொல்லாம்
வாக்கியம்தன்னைக்கேட்டு வாழும்படிக்கியெல்லாம்
பாக்கியம் பொழியென்று பரமகுருவின்சொல்லாம். (வார்)

2. குருவுரை கேட்டபொழுது குணமென்றந்த
ஸூரகுரு யெளிதாய்த்தந்த
வுரையைக்கேட்டு வுகந்தார் ஓடிவந்தவரிந்தப்
பரமபாஷ்யத்துக்குரை பத்மபாதரேமுந்த. (வார்)

3. செய்திடவேணுமென்றவர் செப்பும்பொழுதும்
செய்தியைக்கேட்டு மனதும்
உய்திடச்சொன்ன குருவுத்தமமொழியிதும்
கைதவமாகாதென்று கண்டுமகிழும்போது. (வார்)

4. அதுகேட்டு சங்கரர்பின்பு அவருடனே
இதுசொன்னூ ரினத்துடனே
மதுரமாகியவாக்கால் மற்றொரு க்ரந்தம்தானே
புதிதாகவுரையென்றூர் பூர்ணதயவுடனே. (வார்)

5. உபநிஷத்பாஷ்யத்துக்கர்த்தம் உரையுமென்று
அபாரக்ருபையோடே விண்டு
அபரோக்ஷமாகத்தானே அனைவர்களும்நின்று
சுபமார்க்கமடைந்திடச் சொல்லும் நைஷ்கர்மமின்று. ( )

6. ஸூத்ரபாஷ்யத்துக்கர்த்தமாய்ச் சொல்லட்டுமந்த
வார்த்திகமிவரும்சொந்த
ஆத்ரத்துடனுரைத்தால் அதுவ்ருத்தியாகாதிந்த
மாத்ரத்திலுரைக்கட்டும் மயங்காமலேயுகந்த. (வார்)

7. பத்மபாதரேநீரிப்போ பாஷ்யார்த்தம்தன்னை
அதவைதமாயுரைபின்னை
தத்வரகஸ்யம்மெல்லாம் தோன்றுமுனக்குத்தன்னை
வஸ்துமாத்திரமாக வர்ணித்திடுவைமுன்னை. (வார்)

## பத்மபாதர் பாஷ்யடீகைசெய்தல்.

விருத்தம். 58

சங்கரர் வாக்யம்தன்னைக் சடிதியாய்கேட்டு அங்கே
பங்கஜபாதர்தானும் பாஷ்யத்துக் கர்த்தம்செய்து,
சங்கரரிடத்தில்கொஞ்சம் சொல்லியே ஸேதுயாத்ரை
கங்குநான் போவேனென்று அரைந்தவர் புறப்பட்டாரே.

தரு, இராகம்-சௌராஷ்ட்ரம். 57

பல்லவி.

பத்மபாதர்செய்தார் டீகா
அத்வைத பாஷ்யத்துக்கோர்க்க.

அநுபல்லவி.

தத்வமஸ்யாதி வாக்யத்தின்
சுத்தமான லெக்ஷ்யார்த்தத்தின். (பத்ம)

சரணங்கள்.

1. விஜயாபிதண்டினியென்ற விஸ்தாரடீகாதன்னை
நிஜமாகவேயியற்றி நின்றார் குருவின்முன்னை (பத்ம)

2. ஸத்குரு பாதத்தைபோற்றி செய்தடீகாதன்னைக்கட்டி
நிற்குணமாகவே சாற்றி நித்யமுதைத்திட்டார்கூட்டி. (பத்ம)

3. கொஞ்சம்கேட்டுசற்குருவும் குற்றமில்லையென்றதற்கு
புந்திருப்புக்கொண்டார்நாலும் போகுமதுவென்பதற்கு.

4. டிகையுடன்சென்றுஅந்த ஸேதுஸ்னானம்செய்துகொண்டும்
வேகமாகவந்துயிந்த வேலையெல்லாம்பார்த்துமீண்டும். ( )

5. கட்டளையின்படிதானே காரியத்தைசெய்வேனென்று
திட்டமாகச்சொல்லிவிட்டு சீக்கிரமாகவேசென்று. (பதம)

6. தேசமெங்கும்சுற்றிக்கொண்டு ஸ்ரீரங்கத்தருகிருக்கும்
வாசமாகப்பூர்வம்செய்த மாதுலரவர்வீட்டுக்கும். (பதம)

7. அங்குவந்தவாதிகளை அதட்டித்துறத்திவிட்டு
சங்கித்துமாமனும்கேழ்க்க சற்குருபாஷ்யத்தையிட்டு (பதம)

8. டீகைசெய்யப்பட்டயிந்த சிஷ்யர்கையிலேயிருந்த
தாலகயாமலேயெங்தன்சொந்தத் தாக்கியக்ரந்தம்மேயந்த. ( )

9. இதினர்த்தமெல்லாம்கேட்டு யிப்போதுநம்குருசொன்ன
விதமெல்லாம்விட்டுப்போட்டு வேறுவிதமாகச்சொன்ன. ( )

10. அதினுலிக்ரந்தம்தன்னை அவர்கையிலில்லாமலே
சதிசெய்துவாங்கிப்பின்னை தகனம்செய்யலாமேலே. (பதம)

11. யிக்ரந்தமிங்கேயிருக்க யிச்சையிருக்குதுபார்க்க
நிக்ரஹிக்காமல்கொடுக்க நீருமிங்கேஸம்மதிக்க. (பதம)

12. ஆகட்டுமென்றுகொடுத்து அவரும்ஸேதுக்குப்போகி
தாகப்படியாத்ரைசெய்து சந்தோஷமனத்தராகி. (பதம)

13. இவர்வந்துசேருமுன்னே இக்ரந்தமிருந்தால்நம்மை
அவமானம்செய்வர்தன்னை யதினுலெரித்தால்செம்மை. (பதம)

14. என்றவரும்க்ரந்தத்தோடே யிட்டனரக்கினிதன்னை
ஒன்றும்பாக்கியில்லாமலே ஒழிந்துவிட்டதுமுன்னை. (பதம)

15. அவர்வந்துபார்க்கும்போது அழிந்துபோய்க்ரந்தமெல்லாம்
அவமாய்விட்டதேயென்று ஆசானிடத்திலெல்லாம். (பதம)

16. சொல்லியாறவேணுமென்று துணையுடன்புறப்பட்டார்
அல்லும்பகலும்கடந்து அந்தசிருங்கிரிதொட்டார். (பத்ம)

17. மகைபோனவழியெல்லாம் தெரியும்படியுரைத்து
சோகமாய்வருந்தும்போதில் தோன்றவேயாசானுரைத்து.

18. நீயொருக்கால்மகைசொன்னாய் நினைவிலிருக்குதது
போயிருக்கும்க்ரந்தம்போக பாக்கியையுரைப்பேனிது. ( )

19. பஞ்சபாதமிருக்குது பண்ணினவுன்க்ரந்தத்திலே
கொஞ்சமதையெழுதென்று குறிப்புடன்சொன்னார்மேலே.

## ஆபத்காலம்வர மாதா நினைக்கும்போது அவளைக்காணல்.

---

விருத்தம். 59

பத்மபாதரும் யாத்திரைக்குப் போயிருக்கும்போதக்க
அத்வைத குருவின்தாயார் அவர்தன்னைநினைத்தாளங்கே
உத்தமர்மனதிலந்த உண்மையும்தோன்றத்தாலும்
மெத்தவும் விரைந்துசென்று மாதாவின்க்ரியையும்செய்தார்.

தரு, இராகம்-சஹானா. 58

பல்லவி.

மாதாவுடையகாலமரணமும் மனநிற்குவேதாந்தவேத்யருக்கு
வந்ததுயிப்போ வேதாந்தவேத்யருக்கு

அநுபல்லவி.

போதாந்தமாய்ப்ப்ரம்ம நிஷ்டையிலிருக்கவும்
ரூதாகஒருவர்க்கும் சொல்லாமல்நடக்கவும். (மாதாவு)

சரணங்கள்.

1. காலடிகிராமத்திலே களிப்புடனிவர்செல்லக்
காலங்கழியவும்மெள்ள மாதாவுடையகாலங்கழியவும்மெள்ள
கோலாகலமாயங்கே குதித்தாரதையும்சொல்ல
மேலானயோக சாஸ்த்ர முடிவதுவாகும்நல்ல. (மாதாவு)

2. அன்னையெதிரில்போகி யவனைவந்தனம்செய்தார்
சின்னவயதில்பிறந்தார் சிக்கிறமாசின்னவயதில்பிறந்தார்
அன்னையுனக்குமேலே யாகவேண்டுமென்னென்றார்
சொன்னமைந்தனைப்பார்த்து துன்பமினியில்லென்றார். ( )

3. எனக்குவேண்டியதெல்லாம் இஷ்டமுடனேசெய்து [கொய்து
மனக்கலையதைக்கொய்து மகனேயெந்தன்மனக்கவலையதைக்
கனமானபரலோக கதியடைந்திடச்செய்து
அனவரதமுமங்கே யமர்ந்திருக்கவும்செய்து. (மாதாவு)

4. இதுதான்நீசெய்யவேண்டும் என்றுமாதாவுரைக்க [சிறக்க
அதுகேட்டுஅவர்சிறக்க அன்னையிடத்தில்அதுகேட்டுஅவர்
பொதுவாகஇருக்கின்ற ப்ரம்மதர்மமுரைக்க
யதிச்ரேஷ்டர்க்குணமும் எனக்குமேருதானெங்க. (மாதாவு)

5. ஸகுணபரமாகவே சாற்றவேண்டியதென்றாள் கூறென்றாள்
வெகுவாகஅதைக்கூறென்றாள் விஸ்தாரமாகவெகுவாகஅதை
மகதாச்சரியமாக மகிழும்சைவமுறைத்தார்
மிகவும்பரமசிவ மூலதூதர்கள்வந்தார். (மாதாவு)

6. இந்ததூதர்களுடன் எட்டிநடந்துபோக
யெந்தனாலதுவுமாகா தருமைமைந்தா எந்தனாலதுவுமாகா
எந்தவிதம்சொன்னாலும் ஏர்க்கவில்லையதாக
சிந்தையில்ஹரிபாதம் த்யானிப்பதுமேவபாக. (மாதாவு)

7. ஹரிபக்தரவிடத்தில் அழகுடனேவந்து [னம்கொணர்ந்து
செரியாய்விமானம்கொணர்ந்து சங்கரர்முன்பு செரியாய்விமா
தரையிலிருந்துயேந்தி தங்களிடத்தில்சேர்ந்து
பிரியாமல்வைகுண்டத்தில் புகழ்ந்துஅவளிருந்து. (மாதாவு)

மாதாவின் கர்மம்செய்ய க்ராமத்தாரை கூப்பிடுதல்.

---

விருத்தம். ௫௦

மரித்திட்டமாதருகர்மம் மகிழ்ச்சியாய்ச்செய்யவேண்டி
பெருமையாய்க்ராமத்தாரைப் போயழைக்கின்றபோது

ஒருவரும்போயவர்களெல்லாம் உன்னிடம்வருகமாட்டோம்
கருமங்கள்நடக்குமோடா கடிகிபோபோடாவென்றார்.

தரு, இராகம்-சுருட்டி. 59

பல்லவி.

க்ராமத்தோர்களெல்லாருங்கள் தாயின்
கர்மங்கள்செய்து முடிக்கலாமிங்கள். (க்ரா)

அநுபல்லவி.

மாமறைமொழிகூறிடும் அந்த
க்ஷேமமாகவே நாமஞ்செய்திடும். (க்ராம)

சரணங்கள்.

1. உடலைப்பிடித்தெடுக்கணும்
சுடலைக்கரையில்வைக்கணும்பின்பு
தடையில்லாமலே தஹிக்கணும்
தாயின் கடனில்லாமலேமுடிக்கணுமென்றாய் (க்ராம)

2. சீக்கிரம்வந்துசேருங்கள்
வாக்கினால்சொன்னேன்பாருங்கள்பின்பு
ஆக்ரகங்களைத்தீருங்கள்
சொந்தமாக்குமென்றிந்த க்கார்யங்கள்நன்றாய். ( )

3. இவ்விதம்சொன்னச்சொற்களைச்
செவ்வையாயறியாமலேயவர்
எவ்விதத்திலு மிசமூவேதங்கள்
அவ்வியங்கொண்டு அழியவேநன்றாய். (க்ராம)

4. போடாபோடாவென்றதட்டவே
வாடியவருமிருக்கவே பின்பு
வீடுவந்திவர்சேரவே மேலே
காடிக்கார்யத்தை நடத்தவேயிப்போ. (க்ராம)

## மாத்ரு தகனம்செய்து க்ராமத்தோர்களுக்கு சாபமிட்டுத்திரும்பல்.

விருத்தம் 61

பந்துக்கள் சொன்னசொல்லை பலதரம்கேட்டிருந்தான்
சிந்தையில் துயரம்கொண்டு சீக்கிரமெழுந்துநின்று
வந்தவர்கொல்லைதன்னில் வலதுபக்கத்திலந்த
அந்தணர்வழக்கம்போலே அடுக்கினார்வாழைதன்னை.

தரு, இராகம்—ஆகிரி. 60

கண்ணிகள்.

1. வீட்டின்புறவடையில் வலதுபக்கத்திலந்த தேசிகேந்தரன்
காட்டிலுள்ளவாழையின்கட்டையடிக்கிவைத்தார் தேசிகேந்தரன்
2. தாயின்சரீரம்தன்னை தனித்தனியாய்வெட்டினார்தேசிகேந்தரன்
காயமதையெடுத்துக் கட்டையில்கூட்டிவைத்தார் தேசிகேந்தரன்
3. தன்னுடைகமண்டலு ஜலத்தைக்கையிலெடுத்து தேசிகேந்தரன்
அன்னைவலதுகையில் அக்னிபோல்வைத்தார் தேசிகேந்தரன்
4. தீயதுவாகியங்கே தஹித்துவிட்டதுஅப்போ அந்தநீரே
தாயின்சரீரமிப்போ தகனமாச்சுதுயென்று சிந்தைதீரே
5. தான்வந்தகார்யமாச்சுசடிதியில்போவோமென்று தேசிகேந்தரன்
வின்வார்த்தைசொன்ன அந்தவிப்ரர்களையும்பார்த்து தேசிகேந்த[ரன்
6. இந்தக்ராமத்தில்நல்ல யதிகள்வரவும்வேண்டாம் என்றுசொன்[னார்
அந்தணர்குலகர்மம் அழிந்துபோகவும்வேண்டும் என்றுசொன்[னார்
7. வேதம்விளங்காமலும் விப்ரத்வமும்போகட்டும் என்றுசொன்[னார்
நீதியும்தவறிப்போய் நில்லுங்களெப்பொழுதும் என்றுசொன்[னா

8. செத்துப்போனப்ரேதத்தைச் சேநிந்துக்கொல்லையில் வைக்க [வேண்டும்
சுத்தமில்லாமல்நீங்கள் சூத்ரர்போலவேயென்றும்ஆகவேண்டும்

9. இப்படிபேசாபத்தை யிட்டுப்போகியபின்பு தேசிகேந்தரண்
தப்பிதமில்லாமல் கூடிபித்துப்போச்சுஅப்போ அந்தக்ராமம்

## திரும்பி ஸ்ரீங்ககிரிவந்து சிஷ்யர்களைக்காணுதல்.

விருத்தம். 62

மாதாவின்தகனம்தன்னை மகிழ்ச்சியாய்செய்துஅந்த
வேதாந்தவேத்யராக விளங்கிடும்சங்கரன்றான்
தீதற்றயோகத்தாலே சென்றனர்ஸ்ரீங்கேரிக்கு
போதத்தால்புகழுகின்ற புண்யவான்களையும்கண்டார்.

தரு, இராகம்—சாவேரி. 61

பல்லவி.

மாதுருகர்மந்தைச்செய்து மகிழ்ந்துஸ்ரீங்கேரிவந்து
பார்த்துமடாலத்தைச் சேர்ந்து.

அநுபல்லவி.

ஆத்ரத்துடனேயங்கே அழைத்துஸுரேச்வரரே
பாத்ரமென்றுநிருத்தி ப்ரயாணப்பட்டாரிவரே. (மாது)

சரணங்கள்.

1. அத்வைதசாஸ்த்ரம்தன்னை யங்குவந்தவருக்கும்
நித்யமுரைத்துக்கொண்டு நியிருக்கும்
தத்வமதையுங்கண்டு சந்ததம்சகலர்க்கும்
அத்தையேயநுஷ்டிக்க ஆவலுண்டாயிருக்கும். (மாது)

2. இன்னம்பாஷ்யார்த்தங்களை யெடுத்தெடுத்துரைத்து
சொன்னபடியெநிஷ்டை தோன்றவைத்து
பின்னுமதிலிருந்து பேதியாமலேகாத்து
நன்னியனாகும்படி ஜகத்திலுள்ளோரைப்பார்த்து. ( )

3. சேதுயாத்ரைக்கிராமம் சிஷ்யருடனேசென்றும்
பார்த்துக்கொண்டுவருவோம் பரிவாயென்றும்
தீர்த்தயாத்திரையென்றும் திக்விஜயங்கள்கொண்டும்
தீர்த்திமதவாதிலை ஜயித்துத்தானாகின்றும். (மாது)

4. ஆசார்யபீடமென்றும் அவரையங்கேநிறுத்தி
வாசாமகோசரமாய் வைத்துவாழ்த்தி
ஆசானும்புறப்பட்டார் அன்யசிஷ்யரைச்சேர்த்தி
தேசாந்தரம்போகவே தெக்ஷணதிக்கைப்பத்தி. (மாது)

5. தாங்கள்போகுமிடத்தில் சகலமதங்களையும்
ஆங்காங்கேவாசம்செய்து அடக்கிவிட்டும்
நீங்குற்றிருந்தஅந்தத் தேசத்திலவருக்கும்
பாங்காகஅத்வைதத்தைப் பாவிக்கும்படிவைத்தும். ( )

6. யெங்குமத்வைதத்தையே யேராளமாகவைத்து
சங்கையில்லாமல்தாங்கள் ஜயத்தைப்பெத்து
தங்கும்வழியில் ஜகனாதத்தைப்போயடுத்து
அங்குமொருமடத்தை யழகுடனேநேமித்து. (மாது)

7. ஹஸ்தாமலகர் தன்னை யவிடத்திலேயிருத்தி
சொஸ்தசித்தராகவே ஸுகிக்கயுக்தி
எத்தனைவேண்டியதோ யெடுத்ததுகளைபுத்தி
யுக்தியுடனேசொல்லி யுரைத்திட்டாரதைப்பத்தி ( )

8. அதுவிட்டுப்புறப்பட்டு அங்கங்கும்ஜயம்பெத்து
கதிதரும்காஞ்சீநகர் தனையும்முத்து
அதிசயத்துடனங்கே யவர்களும்வந்துபார்த்து
புதுமைபுதுமென்று ப்ரமைக்காமலேநிலைத்து. (மாது)

## காஞ்சீபுரத்தை இரண்டாகவகுத்து சக்திமதகண்டனம் செய்து ஸ்ரீ சக்ரம் ஸ்தாபித்தல்.

---

விருத்தம். 63.

காஞ்சிமாநகரந்தன்னில் களிப்புடன்வாசம்செய்து
வாஞ்சிதபலத்தைச்சேர வகையுடன்சக்திபூஜை
தாஞ்செய்துகொண்டிருந்த சகலரைஜயித்தபின்னும்
காஞ்சியையிரண்டாய்ச்செய்து காட்டிஸ்ரீசக்ரம்போட்டார்.

தரு, இராகம்-சுருட்டி. 62

பல்லவி.

காஞ்சிபுரத்திலுவசிக்கும் சாக்தரைக்
கண்டனஞ்செய்து ஜயித்தார்முக்தரே.

அனுபல்லவி.

வாஞ்சிதார்த்தத்தை யளித்திடுமென்று
தாஞ்செய்பூஜைகள் சக்தியையென்று. (காஞ்சி)

சரணங்கள்.

1. அப்பூஜை மிகக்கொடியதாமென்று
தப்பில்லாமலே ஜயித்தவரின்று
இப்பூமியுள்ளோருரைக்கவே கண்டு
எப்பொழுதுந்தானேகமாயின்று. (காஞ்சி)

2. ஏகாம்பரநாதனிருக்குமிடத்தில்
யோகியானவர்யோசித்திடத்தில்
ஏகாந்தமாகயிருக்குமிடத்தில்
ஸ்ரீகாஞ்சியென்ற சிவஞானஸ்தலத்தில். (காஞ்சி)

3. வரதராஜரும் வஸிக்குமிடத்தில்
ஹரிகாஞ்சீயென்று அழைக்கும்ஸ்தலத்தில்.

உருதியாகவே யூகித்திடத்தில்
ஸருவஸித்தியும் தருகும்நிஜத்தில் (காஞ்சி)

4. ஹரிபரமாயும் சிவபரமாயும்
வருஷித்தார் ச்லோகமிகவதாகியும்
பரப்ரம்மமென்றுபகர்வதாகியும்
செரிசெரியென்று சிவனும் விஷ்ணுவும் (காஞ்சி)

5. சிவகாஞ்சிவிஷ்ணு காஞ்சிமத்தியில்
தவராமலொரு ஸ்தலத்லதச்சித்தியில்
இவருமமைத்து யிருக்குமுத்தியில்
தவரில்லாமலே செய்தார் பக்தியில் (காஞ்சி)

6. ஸ்ரீசக்ரமொன்று யேர்படுத்தியே
ஆசானவிடம் விட்டுயேகியே
தேச தேசங்கள் திரியப்போகியே
யீசனடஞ்செய்யிடத்தைநாடியே. (காஞ்சி)

7. காமாக்ஷியென்று காரணப்பேரும்
தாமாகஅந்த சக்திக்கூரும்
யேமாராமலே யிருக்கவேயாரும்
க்ஷேமமாகவே ஸுகிக்கவேயூரும். (காஞ்சி)

## சிதம்பர க்ஷேத்ரம் வந்து சபாநாதர் தெரிசனம்செய்து சூர்யமதத்தைக் கண்டித்தல்.

---

### விருத்தம். 64

சிதம்பரக்ஷேத்ரம்தன்னில் சிறப்புடனாசான்வந்து
ஸ்திதமாகநடனம்செய்யும் தாண்டவமூர்த்திதன்னைச்
சதமாகஅடையும்மோக்ஷ சாம்ராஜ்யஸுகமேயென்று
அதிகமாய்ச்சொல்லியர்க்க மதஸ்தரையடைவாய்வென்றார்.

தரு, இராகம், இர்குல்தான் காபி 63.

பல்லவி.

தாண்டவமூர்த்திதன்னை தெரிசனம்செய்தாரே-

அனுபல்லவி.

ஆண்டவனென்று அங்கேயனுதினம்நின்றாரே. (தாண்)

சரணங்கள்.

1. பக்தபராதீனரும் பார்வதிஸமேதரும்
முக்தியாம்ஸ்வரூபரும் மோக்ஷங்கொடுப்பவரும். (தாண்)

2 விபூதிருத்திராக்ஷத்தை விதியுடன்தரித்தத்தை
மாபூதவிகாரத்தை மறந்துநின்றார்தானத்தை. (தாண்)

3. ஆண்டவன்பூஜைதன்னை யாதரவாகப்பின்னை
வேண்டியமட்டும்கொன்னை வில்வத்துடன்முன்னை. (தாண்)

4. இவரிங்கிருக்கையிலே யெல்லோரும்த்வேஷத்தாலே
ஸவுரமதத்தினாலே ஜயிக்கனுமென்றதாலே. (தாண்)

5. நேர்ந்தசவுரமதத்தை நிமிஷத்தில்ஜயித்ததை
சேர்ந்துபாரத்வைதத்தைத் தீருஸவுரமதத்தை. (தாண்)

6. ஸௌர்யமதத்தைவென்று தாடிவரும்பின்சென்று
ஆர்யமதமேயொன்று அதிகமென்றவர்நின்று. (தாண்)

7. அவிடம்விட்டுநடந்து அந்தவழியேவந்து,
கவலைமுழுதொழிந்து கண்டார்மாலிங்கம்சேர்ந்து. (தாண்)

8. மத்யார்ஜ்ஜுனத்திலந்த மகத்குருவந்துயிந்த,
அத்வைதமேசொந்த மாகுமதுவேமுந்த. (தாண்)

9. இபபடியுரைத்திட்ட யிந்தகுருவைக்கிட்ட
தப்படியாகச்சுட்டத் தருமென்றுநினைத்திட்ட. (தாண்)

## மகாலிங்கமூர்த்தி யாவிர்பாவமாய் அத்வைதம் ஸத்யமென்றது.

---

### விருத்தம். 65

திருவடமருதூரென்று சொல்லியக்ஷேத்ரம்தன்னில்
ஒருவிடத்திருந்துகொண்டு உத்தமகுருவும்பின்னும்
உருதியத்வைதமொன்றே யுள்ளதுமற்றையெல்லாம்
மருளென்றார்மனிதர்பார்க்க மகலிங்கமதுவேசொன்னார்.

### தரு-இராகம்-புன்னாகவராளி. 64

#### கண்ணிகள்.

1. திருவடமருதூரில் திவ்யரூபத்துடனேநின்று ஆசான்
உருதியாகவேசொல்வேன் ஒன்றேயத்வைதமென்றுகொண்டு
[ஆசான்

2. கோவில்குளம்தெருவில்கோஷமாகவேசொன்னார்தேசிகேந்தரன்
ஆவலுடனே அத்தை யாவரும்வினவென்றார் தேசிகேந்தரன்

3. அந்தவார்த்தையைக்கேட்ட அவ்வூருஜனமெல்லாங் கூட்டமாகி
உந்தனுரையெமக்கு உருதியாகனுமானால் சிரேஷ்டமாகி

4. இந்தமகாலிங்கத்திலெழுந்து யீசனுரைத்தால் ஸத்யமாருக
அந்தப்படியாவரும் அரையாட்டாலுன்வார்த்தைமித்தையாகுகி

5. என்றுயிவர்கள்சொல்ல யேகாந்தமாயாசான் கோவில்பூந்து
நின்றுகொண்டீசனை நினைத்துத்யானம்செய்தார் நினைவுமோய்த்து

6. அப்பொழுதுலிங்கத்தில் ஆவிர்பாவமாயீசன் வந்துநின்றுட
தப்பில்லைசங்கரர் சொன்னவார்த்தையேஸத்யம் ஸத்யமென்று

ஈசனுமுரைத்திட யெல்லவருமேகேட்டு பக்தியோடே
மாசற்றகுருபாத மகிமைமகிமையென்றார் ஷித்திமேயே

8. எல்லாரும்பணிந்திட்டார் ஈசனேநீரென்று அந்தக்காலம்
அல்லாதகாலத்தும் அயனைப்பெருகுருவென்றார் அவர்கள்தானும்

9. சோழமண்டலமெல்லாம் த்வைதம்தலையெடாமல்செய்து ஆசான்
சோழமண்டலம்விட்டுத் துரையாய்மதுரைவந்து நின்று ஆசான்

## மதுரையில் சுந்தரேசர் தெரிசனஞ்செய்து சைவமத சக்திமதகண்டனம்.

---

விருத்தம். 66

பாண்டியநாட்டைவந்து பரிவுடன்சேர்ந்துஆசான்
வேண்டியமட்டுமெந்த விபூதிருத்திராக்ஷம்பூண்டு
ஆண்டவன்சுந்தரேசன் அருகில்வந்திருந்துகொண்டு
மாண்டிடசைவர்சாக்தர் மகத்குருவாதித்தாரே.

தரு—இராகம்-தோடி. 65

1. அத்வைதமதமொன்றுமேலத்யம் அன்யமதங்கள் மித்தையாம்
தத்வமறிந்த சங்கரர்சொல்லச் சகலரும்கேட்டு சங்கையாய்

2. சைவமதமேசிறப்பாகுமென்று சடிதியில்சொல்லக்கேட்டதை
தைவமதற்குருவுண்டோசொல்லும் சீக்கிரமாகயெனக்கதை

3. அதற்குஉத்தரமறைவனொருவன் அர்த்தசந்திரப்பிறையுடன்
ஸ்திதமாய்க்கட்டிய ஜடையில்கங்கையும் சீர்கையில்மானும்மழு
[வுடன்

4. நெத்தியில்கண்ணும் சேர்ந்ததேகத்தில் நின்றிடும்பாதிப்பெண்
[ணுரும்
உத்தமமாகநின்றிடுமொரு உண்மைரூபத்தைக்கண்ணுரும்

5. என்றுசைவனுமுரைத்திடக்கேட்டு யிந்த சங்கரருளினால்
ஒன்றும்சொல்லுவாரனுக்ரகித்திட ஒப்புக்கொண்டதவ்வுருவினால்

6. அல்லாமல்வேறேபுருவில்லையென்று அந்தச்சங்கரரோதியே
பொல்லாதகமனப்பேயையோட்டியே புரமுவைத்தார்சையாதியே

7. மறுபடிசக்திமதவாதிவந்து மரித்துக்கொண்டவன் சொல்லவும்
பெருமையாகிய வெங்கள் தெய்வத்தைப் பொய்யென்று நீயும் சொல்லவும்

8. ஸகிக்கமாட்டோ நாமிந்தவார்த்தையைச் சடிதியாய்விடைகொடுக்காட்டால்
அதுநிதம்சொல்லிய உன்னையிப்பவே அடக்கிப்போடுவோமுனாக் காட்டால்

9. என்றுசாக்தனுமிறைந்து சொல்லி யெடுத்துரையிப்போ விடையென்றான்
அன்றுசங்கராவனுக்குத்தரம் அப்பொழுதிலே சாற்றினார்.

10. சத்தியென்பது சத்தனையன்றிச் சலிக்குமோ அதைச்சாற்றடா
யுக்தியில்லாதவார்த்தையுனக்கு உறுதியாகுமோசொல்லடா. ()

11. என்றுசங்கரரெடுத்துகூறியே யிப்மதங்களை கண்டித்தார்
நின்றவாதிகள் நீர்சொன்னயுக்தி நன்றுநன்றென்றுச்லாகித்தார்

12. பாண்டியநாட்டைடப்பரிவுடனுசான் பற்றியத்வைத மாக்கியே
வேண்டியமட்டும் விரைந்துபோகியே விராம்பும்ஸேதுவைநோக்கியே.

## ராமேஸ்வரத்தில் ராமநாதர் தெரிசனம் செய்து பைரவ பாசுபதமத கண்டனம்.

---

விருத்தம். 67

ராமனால்கட்டப்பட்ட ரமணீயஸேதுதன்னை
க்ஷேமமாய்நோக்கியாசன் சீக்கிரம் ஸ்நானம்செய்தார்
பாமரஜனங்களான பைரவர் பாசுபாதாள்
தாமவர்தன்னைவென்று சங்கரர்புறப்பட்டாரே.

தரு, இராகம், புன்னாகவராளி. 66

பல்லவி.

ராமஸேதுவைக்கண்டோ லக்ஷியமாகத்
தாமதமாகின்றீரே.

அனுபல்லவி,

மாமறையுரைத்திடும் மாசற்ற பொருளிந்த
ராமநாதரே யென்று ரஹஸியமாக அந்த. (ராமலிங்கா)

சரணங்கள்

1. ஆரணப்பொருளேயந்த அகண்டமான பூரணவடிவமிந்த
தாரணிமுழுதும் சொந்தம் தவராமலே காரணமாகவேவந்த
சிரானவஸ்துவொன்றே ஜகமுழுதும்நிறைந்தவேறொன்றுமில்லா
[மலே விளக்கமதுவேதாந்த ராமலிங்கா

2. இப்படி யிரண்டில்லாமல் இருக்கும்போது தப்படியாகச்செய்
வதில்
ஒப்பில்லா ஒருவனதில் உறுதியாகமெய்ப்பட உரைத்தான்
பதில்
அப்படிபைரவனே யனைத்திலு மிருப்பதில்
யெப்படியெல்லையென்று யெடுத்து நீர்சொல்லுமதில் (ராம)

3. அதுகேட்டு அழகுடனே யந்த சங்கரர் இது சொன்னாரவனு
டனே
வதைசெய்யும் தொழிலுடனே வாழ்வதுமுக்கள் சதியென்
றாரவருடனே
மதிமோசம்போனஅந்த மயக்கம் விட்டவுடனே
கதியென்றுஅத்வைதத்தைக் கிட்டி யடைவுடனே(ராமலிங்கா)

4. பசுபதியொருவன் வேறேயுளனென்பதை சுசிபெறவிடுத்தா
லேறே
சசிபோலேவிளங்கு வீரே சர்வதாநீங்கள் விசனம்விட்டிருப்
பீரே
தசையெனும்பாலேசெய்த தேகத்தை மறப்பீரே
அசையாமலகண்டமாயனு தினமிருப்பீரே. (ராமலிங்கா)

5. ப்ராந்திமுழுதையும் விட்டும் பரிபூரணமாய் சாந்தியதனையும்
தொட்டும்
வியந்து பேதங்களும்கெட்டும் விஸ்வாசத்துடன் ஓய்ந்துஉத்
தம மாகாட்டும்

ஆய்ந்தறிந்தாலதுவும் அர்ப்பமாய்பவிக்கட்டும்
மாய்ந்து பாசுபதமும் மகிமையற்றது கெடட்டும். ராமஸேது

6. அத்வைத நிஷ்டையடைந்து அந்தவாதிகள் இத்வைதஜகம் மறந்து
ஸத்வைரமதியிழந்து சாதுவாகவே நித்யானங்கள் நிறைந்து
உத்தமசுகத்திலே உன்னிதமாயிருந்து
பத்தரபாசுபத மதப்ரமையை மறந்து. (ராமஸேது)

7. ராமேஸ்வரத்திலிருக்கும் ஜனங்களுக்கும் தர்மேபோதித்தார வற்கும். ஸ்ரீமான் மொழியேயடுக்கும் சீக்கிரம் நாமள் ஏமாரா மலே யிருக்கும், தாமாமென்று நினைந்தால் சகலத்திலும் சிறக்கு, பூமாவுருவமாகப் புகழ்ந்து தாமேயிருக்கு. (ராமஸேது)

## வக்ரதுண்டபுரம் வந்து கணபதி மதத்தைகண்டித்தல்.

---

விருத்தம். 68

சகலருமத்வைதத்தைத்தாமாக ஒப்புக்கொள்ள
அகண்டமாய்ச்செய்து ஆசான் அவ்விடம விட்டுப்பின்னும்
வலகையுடன் வக்ரதுண்டபுரம் தன்னை அடைந்து அப்போ
மகிமையாம்காணுபத்ய மதத்தையுங்கண்டித்தாரே.

தரு, இராகம், மத்யமாவதி.

பல்லவி.

கணபதிமதத்தை வென்றார் ஸ்ரீகுருநாதர்
கணக்கில்லாமகிமை கொண்டார்

அனுபல்லவி.

வணக்கமில்லாமலங்கே வந்திடும் ஜனங்களை
யிணக்கம்வரும்படிக்கி யெடுத்தவர்ச்ருதிகளை. (கணபதி)

சரணங்கள்.

1. வக்ரதுண்டபுரத்தில் வந்துஇவருமிக
வுக்ரமாகவேபேசி யுள்ளங்கரைவதாக

வக்ரபுத்திகளெல்லாம் வழிபட்டுதானாக
அக்ரமங்களைவிட்டு அவர்களுமடைவாக.
மிக்குருமொழியை மிணக்கமாக கேட்டு
தக்கதிதுவென்று தங்கள்செயல் விட்டு. (கணபதி)

2. படிந்துவந்தவர்களைப்பார்த்து குருவுமந்தப்
படிநடந்துகொள்ளுங்கள் ப்ரமைகளைத்துமசிந்தக்
கடினமில்லாமல் நீங்கள் கண்டு அத்வைதமுந்தச்
சடிதியாகவேயெங்கும் தன்மயநிலைவந்த
அடியுமுடியில்லா ஆத்மஸ்வரூபமெந்தப்
படியில்கிடைக்குமோ பாருமதைச்சொந்த. (கணபதி)

3. ஆசானிவ்விதம் சொல்ல அவர்கள் கேட்டுமகிழ்ந்து
மாசானகளங்கத்தை மனதிலவரிகழ்ந்து
லேசாகஅத்வைதத்தை லக்ஷியமாய்ப்புகழ்ந்து
வாசாமகோசரமாய் வாழ்ந்துஅவரிருந்து
தேசிகமூர்த்தியைச் சிந்தையில்நினைந்து
ஆசகலத்தானே யவர்களும் நிறைந்து. (கணபதி)

4. அங்குஜயமடைந்த ஆசான்மறுபடியும்
துங்கஞானிகளாகத் துலங்கும்படியவரும்
இங்குபிரயாணப்பட்டு இடையூறில்லாமல்யாரும்
தங்குமிடங்களெல்லாம் தாழ்ந்தார்கள் இவர்நேரும்
மங்களவாக்கியத்தால் மடமையதுகெடும்
அங்கைநெல்லிபோலே யனந்தபுரம்வரும். (கணபதி)

## அனந்தசயனத்தில்வந்து வைஷ்ணவமதத்தை கண்டித்தல்.

---

விருத்தம். 69

அனந்தசயனத்தைவந்து அக்கணமடைந்து ஆசான்
அனந்தநாமங்கள்பெற்ற அம்மஹாவிஷ்ணு தன்னை

தினம் தினம் போற்றிசெய்து சிஷ்ய வர்க்கங்களோடே
மனந்தன்னில் தைர்யத்தோடு மாற்றினர் வைஷ்ணவாளை.

தரு. இராகம், காம்போதி. 68

பல்லவி.

அனந்தபத்மநாபரை ஆசான்மிகப்பணிந்து
மனந்தனிலேயே மகிழ்ந்து.

அநுபல்லவி.

தினம் தினம் கோவில் போய் திவ்யநாமங்கள்சொல்லி
அனவரதமுமந்த நாமபாஷ்யங்கள் சொல்லி. (அனந்த)

சரணங்கள்.

1. காரணப்பொருள்தானே களிப்புடனிவிடத்தில்
நாரணநாமந்தாங்கி நடித்திடும் நடனத்தில்
பூர்ணஜ்ஞானியர்கள் ப்ரமைக்காமலிருந்தத்தில்
வேறுஜனங்களெல்லாம் விரும்பியவரிடத்தில்
கூறுவார்கள் பேதங்கொண்டு மயக்கத்தில்
ஆரியர்களதை யகற்றியகண்டத்தில்
நேருடனேநிற்பார் நிஷ்டையாக அத்தில்
சாரங்கந்தரித்த ஸ்வாமியையகத்தில். (அனந்த)

2. இப்படியிவாங்கே யிருக்கும்பொழுது அந்தக்
கற்பிதங்களை மெய்யாய்க் களிக்குமொருவன் வந்த
அற்புதங்களையெல்லாம் அந்தசங்கராரிந்தச்
செப்பும்மொழியினாலே தெரியும்படிக்கு நேர்ந்த
சொற்பொருளைக்கேட்டு துஷ்டர்களுமோர்ந்த
அப்பரம்தெளிந்து ஆனந்தமும் சேர்ந்த
ஒப்பியவர்களும் உங்கள் மொழிதேர்ந்த
நிற்பதுவேநாங்கள் நேமமாகவந்த (அனந்த)

3. விஷ்ணுவே யெல்லவர்க்கும் விளங்கும்பொருளதென்று
வைஷ்ணவர்களுரைக்கும் வார்த்தை யதுவகன்று

வெட்டவெளியுருவாய் வாழ்ந்திருப்பதோன்று
சிஷ்டரிவருடைய செய்கைபெலத்தைக்கொண்டு
நஷ்டமாகிநாமள் கொண்டமதமின்று
துஷ்டமென்றுஅவர் துரத்தித்துயர்வென்று
கஷ்டமன்றியிலே களிப்பாயவர்நின்று
நிஷ்டையுடனெல்லாம் அத்வைதமாய்க்கண்டு (அ)

## வாஸுகி க்ஷேத்திரத்திற்குப்போய் சுப்ரமண்யமத கண்டனம்.

---

விருத்தம். 70

அன்னகர்விட்டு ஆசான் அப்புரம் நடந்துபோகி
சொன்னவாஸுகிக்ஷேத்ரத்தைச் சேர்ந்தவர்பார்க்கும்போது
சின்னவராகி ஸுப்ரமண்யருமிருக்கக்கண்டு
நன்னதிமுழுகிஆசான் நாதனை ஸ்துதியும் செய்தார்,

தரு இராகம் நீலாம்புரி. 69.

கண்ணிகள்.

1. ஸ்வப்ரகாசமாகவே துலங்கிடும்பொருளிந்த
ஸுப்ரமண்யப்பேரோடே சுகம்தந்த
2. ஆரணப்பொருள்தானே அடியார்கள்பொருட்டாக
சூரபத்மனைக்கொன்று ஸுகமாக
3. இருக்கின்ற ஸ்வரூபத்தை யுற்றறியாமல் போகி
திரைக்குள்ளிருக்கின்றுப்போல் திகைப்பாகி
4. உண்மையறியாமலே உளரிக்கொண்டு ஜனங்கள்
நன்மையறியாமலே நடந்தார்கள்
5. என்றுசங்கரர்சொல்ல யெழுந்துஒருவனிது
நாறுநன்றென்று சொல்லி நலமுணது

6 வார்த்தையதுவுமாகும் வாழுமெங்கள்தெய்வத்தைப்
பார்த்துப்பொய்யென்றுசொல்லப் படுமோ அத்வை

7. உரையென்றுகேழ்க்கும்போது உத்தமகுருதானும்
அரைந்தனரகண்டமா யர்த்தம்தானும்

8. வழிபட்டுமனிதர்கள் வாழும்படிக்குநன்றாய்
மொழியப்பட்டதுவன்றி முற்றுமின்றாய்

9. வேலாயுதம்தரித்து விளக்கமாகவேயிங்கே
மூலகாரணம்தானே முழுதுமங்கே

10. வேறொருபொருளில்லை வஸ்துவைவிட அத்வைச்
சேருங்கள்நீங்களெல்லாம் சிறப்பாயிதை

11. என்றுரையும்பொழுது யெல்லோருமொருமித்து
நன்றுநன்றென்றுரைத்தார் நலமிகுத்து

12. அனைவருமத்வைதத்தை ஆதரவாயறிந்து
மனந்தன்னில் சங்கரரை மதித்திருந்து

13. அங்கிருந்துப்புறப்பட்டு அழகாய் ம்ருடபுரிக்கி
சங்கரரும்வந்தாரந்தக்ராமம்புக்கி

## ம்ருடபுரிக்குப்போய் பௌத்தரைக்கண்டித்தல்.

---

விருத்தம். 71.

சங்கரர்ம்ருடையென்றிட்ட மேலான நகரந்தன்னில்
தங்கியே சிஷ்யரோடு தடையின்றி யிருக்கும்போது
அங்கொருபௌத்தன்வந்து யாதொன்றுஅவரைக்கேழ்க்க
பொங்கிடும் பூர்ணவஜ்ஞானி பௌத்தனைகண்டித்தாரே

தரு. இராகம், புன்னாகவராளி.
கண்ணிகள். 70.

1. யாதொன்றுபௌத்தரும் அதட்டி குருவைக்கேழ்க்க அந்தநேரம்
பூரண ஞானியான புண்ணியர்பதில் சொன்னார் அந்தநேரம்

2. நீயாவன்சொல்லென்று நேருடன்குருகேழ்க்க அந்தநேரம்
ஓயாமல்வாதித்து ஒப்புஞ்சூனியமென்றான் அந்தநேரம்

3. ஸௌகதருவெங்கள் ஸ்வாமியதாகுமென்றார் அந்தநேரம்
ஸௌகதரவருக்கு சிஷ்யர் நாவலர்களென்றார் அந்தநேரம்

4. க்ஷணகவிஞ்ஞானவாதி ஸௌந்த்ராந்திகனுமென்றார் அந்தநேரம்
யிணையில்லாமாத்ய மீகன் யென்றான்சூனியவாதி அந்தநேரம்

5. புத்திமுதலாகிய பேதமெங்களின் மதம் என்றந்நேரம்
பௌத்தன்சொன்னவார்த்தையைப் பரிவுடன் கேட்டாசான் அ

6. அடுக்காதவார்த்தையை அதட்டிச்சொன்னாயென்றார் அந்த
கெடுக்காதேஜெகம்தன்னை கிட்டாமலோடென்றார் அந்தநேரம்

7. தடுத்துபேசினால் சிக்ஷை தகுந்தபடிக்கிச் செய்வேன் என்றான்
எடுத்துப்பேசியேஆசான் இம்மதம் கண்டித்தார் அந்தநேரம்

8. பௌத்தரும்தலைகெட்டுப் போனவர்திரும்பாமல் அந்தநேரம்
தைத்யர்கள்முன்னாளில் தலைகெட்டாற்போல்போனார் அந்த

9. சங்கரரிவ்விதம் ஜயித்து ஸௌகதர்களை யந்தநேரம்
சங்கையற்றுசங்கரர் சென்றார்கோகர்ணம் பின்னும் அந்தநேரம்

10. நூருலக்ஷம்தீர்த்தமாய் நேர்ந்தரத்னாகரத்தில் அந்தநேரம்
ஆரியரும்ஸ்னானம் அடைவாகச்செய்திட்டார் அந்தநேரம்

11. மகாபலேச்வரர்தன்னை மகிழ்ச்சியாய்தெரிசித்தார் அந்தநேரம்
மகாபலர்க்ருபையினால் மருபடியும் நடந்தார் அந்தநேரம்

12. ஜகன்னாதக்ஷேத்ரத்தைத் திரும்பவுமவர்கண்டு அந்தநேரம்
ஜகன்னாதமூர்த்தியை தெரிசனம்செய்துகொண்டு அந்தநேரம்

13. முன்னமைத்தமடத்தில் மோதத்துடனேவந்தார் அந்தநேரம்
என்னசெய்கிறாயென்று இசைந்துகேட்டார்சிஷ்யனை அந்தநேரம்

14. அங்கேயிருக்கும்படி யருளிசிஷ்யனையாசான் அந்தநேரம்
தங்கிவரும்வழியில் தான்கண்டாருஜ்ஜினியை. யந்தநேரம்

## உஜ்ஜினிநகரம் வந்து காளிமதகண்டனம்,

---

விருத்தம். 72

உஜ்ஜினிநகரம்சென்று வுள்நுழைந்திடவேயாசான்
லஜ்ஜையில்லாமலங்கே ரணபத்ரகாளிதன்னை
யர்ச்சனைசெய்துகொண்டு அங்குள்ளஜனங்களெல்லாம்
இஜ்ஜகம்கெடவேசெய்தார் இவர்களைஜயித்தராசான்

தரு இராகம் இந்துஸ்தான் காபி 71

கண்ணிகள்.

1. உஜ்ஜினி நகரில் உகந்திவர் சென்றார்
அச்சமில்லாமல்தா யனதினம் நின்றார்

2. பத்ரகாளியென்ற பகவதிதனையும்
பத்ரமாகவேயவர் பூஜித்தார் பினையும்

3, மதுமாம்ஸத்துடனே மகிழ்ந்தவர்தனையும்
யதிராஜனதுகண்டு யிகழ்ந்தவர்களையும்

4. சண்டாளர்க்ருத்யத்தைச் செய்வதும் நன்றோ
உண்டாலும்மதுமாம்ஸமுய்வதுமுண்டோ

9. நீசக்ருத்யத்தைநீர் நிலையென்றுசெய்கிறீர்
ஈசன்திருவடியை யென்றைக்கு மறியீர்

6. மோசம்போயித்தொழில் மூடத்தால்செய்கிறீர்
ஆசகானுமார்க்கத்தை யன்புடனறியீர்

7. போரும்போருமுங்கள் பூஜைகளினிமே
பாரும்பாருமினிமேல் பரப்ரம்மதின்மேல்

8. உங்கள்சித்தத்தையும் உருதியாய்திருத்தி
தங்குதடையில்லாமல் சகலமுமகற்றி

5. இருங்களென்றுரைத்த யிக்குருமொழியை
பெருமையாகவேயிவர் பிடித்திட்டார்வழியை

10. அத்வைதமதமே யனைவர்க்கும் நிஜமே
ஸத்யம்ஸத்யமிதுவே சாச்வதபதமே

11. என்றவரிருந்தார் இவர்சொல்லை நினைந்தார்
நன்றாநன்றென்று அவர் நாதனைப்பணிந்தார்

12. அதுகண்டு சங்கரர் அவ்விடம்விடுத்து
நதிநகர் நாடுகளை நன்மையாயடுத்து

13. அங்கங்குமத்வைதம் அழகாய்ஸ்தாபித்து
சங்கரகுருதானும் த்வாரகையடுத்து

## அபினவகுப்தன் ஆசார்யருக்கு ஆபிசாரம் செய்தாலும், அவன்மரணமும்.

---

விருத்தம். 73

அபினவகுப்தனென்ற ஆபிசாரன்மந்த்ரத்தால்
அபயமாய்த்திரியுமாசான் அவர்கள்மேல்ப்ரயோகம்செய்தான்
விபரீதமாகத்தானே விளைந்தது சிஷ்யர்கண்டு
அபினவகுப்தன்தன்னை யவர்மந்த்ரத்தாலே கொன்றார்.

தரு, இராகம் ஆரபி. 72

பல்லவி

அபினவகுப்தனொரு ஆபிசாரமந்த்ரத்தால்
ஆசார்யர்மேல் ப்ரயோகித்தான்

அனுபல்லவி

அபயமாகத்திரியும் ஆசார்யர்தேகத்திலே
விபரீதமாகத்தானே வ்யாபித்ததினாலே (அபினவகு)

சரணங்கள்.

1. பகந்தரமென்றவொரு பயங்கரமானரோகம்
நகசிகபரியந்தம் நடுக்கும்படியதாக
அகணிதமாகத்தானே யாகியதவர்தேகம்
மகிமையினாலேயதை மதிக்காதிருந்தார்யோகம் (அபினவ)

2. அந்தவ்யாதியைப்பார்த்து அவர்சிஷ்யரனைவரும்
சந்ததம்மனதிலே தாபங்கொண்டாரவரும்
மந்திரம்மருந்தாலே மாற்றும்படியோர்ப்பாடும்
எந்தவிதம்செய்தாலும் எறிப்போகாததுவும் அபினவகுப்

3. இனியென்னசெய்வோமென்று யேங்கியிருக்கும்போது
தனித்துஅச்வினிதேவர் தயையினால்தானப்போது
மனிதவடிவமாக மருந்து தந்தாரிப்போது
தணிந்துபோகவேவ்யாதி செய்தினாரவரீது அபினவகுப்

4. அபினவகுப்தனென்ற அபிசாரனொருவன்
அபஜயமிவராலே அடையவுமாண்மையுடன்
அபிமானமற்றுமிந்த ஆசான்மேல்த்வேஷத்துடன்
விபரீதம்வரும்படி விளைவித்தானுக்ரத்துடன் (அபின)

5. என்றுசொல்லிக்குமரர் ஏகியபின்பு அந்த
நன்றாப்பாராட்டி நாங்கள் நாதனிடத்திலிந்த
ஒன்றுமுரைக்காமலே வுளத்திலவனைமுந்தக்
கொன்றுவிடுவோமென்று கோபங்கொண்டார்களிந்த (அபி)

6. பத்மபாதர்முனிந்து பாமரனான அந்த
குத்ரவாளியைக்கொன்று குறைகள்தீருவேனிந்த
சுத்தமல்லாததான சூன்யமந்த்ரத்தால்முந்தச்
செத்துவிழும்படிக்கிச் செய்தாரவனைச்சிந்த (அபி)

## ஆசார்யர்த்வாரகையில் மடம் கட்டுதல்.

---

விருத்தம். 74

பின்பங்குபத்மபாதர் முதலானசிஷ்யரோடும்
அன்புள்ளஆசான்சென்று அத்வாரகாபுரத்தில்
இன்புற்றோர்மடமும் கட்டியிருக்கவேசிலநாளங்கே
முன்பந்தசனந்தனப்பேர் மூர்த்தியையங்கேவைத்தார்.

தரு-இராகம், சுருட்டி. 73

பல்லவி.

த்வாரகபுரத்திலந்த சங்கரரொரு
மடமுங்கட்டினார் த்வாரகா.

அநுபல்லவி

ஆரியர்மகிழ்ச்சியோடு ஆத்மஞான
தேர்ச்சியோடு. (த்வாரகா)

சரணங்கள்.

1. பத்மபாதப்பேர்வகித்து வித்வத்சிங்கமாய் ஸேவித்து
உத்தமகுணம்தரித்து அத்வைதமாகச்செழித்து (த்வாரகா)
2. குருவிடத்தில்கொண்டபக்தி செரியதாகநடக்கும் கீர்த்தி
தரித்ததானசாதுபுத்தி பிரதானநித்யவித்தி (த்வாரகா)
3. அஞ்சலித்தகரத்தராகி தஞ்சமென்றுகுருவைப்போகி
வஞ்சமின்றிபணிந்ததாகி மிஞ்சும்வஸ்துதானதாகி (த்வாரகா)
4. இந்தபக்திபுடையநான அந்தசிஷ்யமணியைஞ்ஞான
சிந்துவென்றுபுகழ்ந்து மௌனம் தந்துதாமே தானதான
5. இந்தசிஷ்யமணியையங்கே விந்தையாகயிருத்திகங்கை
வந்ததடத்தில் வஸிக்கயிங்கே வந்தார்கௌடபாதசங்கை.

## கௌடபாதரும் ஆசாரயரும் சந்தித்துப்பேசுதல்.

---

விருத்தம். 75

மாண்டூக்யச்ருதிக்கித்தானே மகிழ்ந்துகாரிகைசெய்தோரும்
ஆண்டவன்கோவிந்தர்க்கு ஆசார்யரானோர் தானும்
வேண்டிய அநுபவத்தை விளக்கமாய் அநுபவித்தும்
தூண்டஸர்வஜ்ஞத்வத்தைத் தோன்றினார்சான் முன்பு.

தரு-இராகம் செஞ்சுருட்டி 74

பல்லவி.

வாரும் வாரும் சங்கரா தீரும் தீரும் சங்கையை

அனுபல்லவி.

பாரும் பாரும் மாண்டூக்யக் காரிகையதைச் சேர்க்கவாரும்.

சரணங்கள்.

1. ஆகமரஹஸ்யத்தை, யதிலொருபாகத்தை
யேகாஸமாயத்தை யெடுத்துக்கூறியதித்தை (வாரும்)

2. வைதத்யமென்பதாக வைத்துதிருஷ்டாந்தமாக
வைதவம்ஜாத்தாகக் காட்டியதுமெய்ப்பாக (வாரும்)

3. அத்வைதமென்றதன்னை யாருமறியமுன்னை
தத்வரஹஸ்யம் தன்னைச் சாற்றினேமதின்பின்னை (வாரும்)

4. அலாதசாந்தியென்றும் அலாந்தரஹஸ்யம்மின்றும் கலா
சாஸ்தருக்கு யென்றும் காணக்கூடாது கொண்டும் (வாரும்)

5. இவ்வித முரைத்த அந்த யிஷ்டமானச்ருதிதந்த ஒவ்வு
மொவ்வுமுமக்கிந்த வுண்மையதுவாகும் சொந்த (வாரும்)

6. பரமகுருவுரைக்கப் பரிவுடனிவர்கேழ்க்க ஒருமனதாய்க்
கலக்க உத்தமநிஷ்டையில் நிர்க்க (வாரும்)

7. இந்தரஹஸ்யார்த்தம் தன்னை யிருவரும் பேசியொன்னை
அந்தர்தானமானார்முன்னை ஆசானும் பார்க்கப்பின்னை (வா)

## காஸ்மீர தேசப்பண்டிதர் தக்ஷண திக்கில் ஸர்வஜ்ஞபீடமேறுவாரில்லை யெனல்.

---

விருத்தம் 76

இவரிங்கேயிருக்கும்போது யிப்படி யொருப்ரக்யாதி
அவர்காதில் பட்டதப்போ அதுதான் யாதென்று கேழ்க்கில்
தவரில்லாதெக்ஷணத்தில் ஸர்வஜ்ஞரில்லாத்தாலே
அவமாய்க் காஸ்மீர பீடமடைத்ததுதெர்க்குவாசல்.

தரு இராகம் சங்கராபரணம் 75

பல்லவி.

ஸர்வஜ்ஞபீடமேரிட தக்ஷிணதிக்கில்
ஸர்வஜ்ஞரில்லையாம் பார்க்கில்

அனுபல்லவி.

ஸர்வம்ப்ரம்மமென்றிட்ட சாச்வதப்பதம்தொட்ட
கர்வம்முழுதும்விட்ட நிர்விகாரமாய்விட்ட (ஸர்வ)

சரணங்கள்.

1. தக்ஷிண திசையிலே தேர்ந்தவித்வானுமில்லே
லக்ஷணம்தெரிந்திட்ட நேர்மையுள்ளவர்சொல்லே
யிக்ஷணமேபிடித்து யெடுத்துக்காட்டவும்தொல்லே
கக்ஷிபேசியதன்னைக் காட்டவொருவர்வல்லே. (ஸர்வஜ்ஞபீ)

2. இப்படிகாஸ்மீரத்தில் எல்லவர்களும்கூடி
ஒப்பும்படியாய்ச்சொல்ல உத்தமராசைநாடி
எப்படியாகிலும்நாம் ஏருவோம்பீடம்தேடி
தப்பில்லையிதற்கென்று சந்ததமவர்பாடி (ஸர்வஜ்ஞபீ)

3. அந்தப்பீடத்திலொன்று ஆரும்ஸ்வாரஸ்யமது
எந்தவித்வான்வந்தாலும் ஏரமுடியாதிது
வந்தவர்ஸர்வஜ்ஞராய் வாழ்ந்தால்முடியுமது
எந்தவிதத்திலும் ஏரக்கூடாததிது. (ஸர்வஜ்ஞபீ)

4. போவோமென்றுநினைந்து புண்ணியர்வரும்போது
ஸாவதானமாகவே தந்த்ரவரும்வாது
ஆவலுடனேசெய்து அம்மாயாபுரமீது
போவோமென்றெண்ணத்துடன் புகழ்ந்துவந்தாரேசாது ( )

## மாயாபுரத்தில் ஷண்மதஸ்தானம் செய்தல்.

---

விருத்தம். 77

மாயாபுரத்தில்வந்து மதங்களாரையும் ஸ்தாபித்து
ஓயாததர்மத்தை ஒட்டியேஆசானப்போ
பியாதிபதிகள்தன்னை நலமுடனழைத்துவைத்து
வாயால்ஷண்மதத்தின்கொள்கை வர்ணிக்கதுடங்கினாரே.

தரு, இராகம், உசேனி. 76

பல்லவி.

ஆசானுமுரைத்திட்டாரந்தஷண்மதக்கொள்கை [விள்கை
நேசத்துடனேதான்விள்கைநிலையதாக நேசத்துடனே தான்

அனுபல்லவி.

வாசாமகோசரமாய் வர்ணிக்கத்துடங்கினார்
மாசுமருவில்லாமல் மகிழும்படிப்பண்ணினார். (ஆசானு)

சரணங்கள்.

1. காணுபத்யமதத்தால் காரணப்ரம்மந்தன்னைப்
பேணும்படிக்கித்தான்முன்னை பெசகாமலே பேணும்படிக்கித்
[தான் முன்னை
ஆணும்பெண்ணுமில்லாத அந்தப்ரம்மமாய்த்தன்னைக்
காணும்படிக்கிச்சொன்னேன் களிப்பாய் மனதில்பின்னை (ஆ)

2. ஸ்கந்தமதத்தினாலே காண்பதுகாரணத்தை
எந்தவிதமும்தானத்தையிடரில்லாமல்எந்தவிதமும்தானத்தை
சிந்தைமகிழநல்ல சிறப்பாகவேமனத்தைச்
சந்ததமும்திருத்திச் சலியாமலேத்ருடத்தை (ஆசானு)

3. ஸௌரமதத்தினாலே ஸ்வப்ரகாசப்ரம்மத்தை
ஆர்யரிந்திட்டாரத்தையனுதினமும்ஆர்யரிந்திட்டாரத்தை
தார்யந்திரம்போல்சுற்றிச் சலிக்கும்ப்ரகாசமத்தை
வீர்யமிருந்தஞானி விளம்பார்நிஜமென்றத்தை (ஆசா)

4. சக்திமதத்தினாலே சேர்வதகண்டாகாரம்
சுத்தப்ரம்மந்ததாகாரம் சுட்டக்கூடாத சுத்தப்ரம்மந்ததாகா
ஸத்யஜ்ஞாநஸ்வரூபம் சக்தியேநிராகாரம் [ரம்
அத்வைதமாகத்தானே அனைத்துமிருக்கும்ஸாரம் (ஆசா)

5. சிவமென்றசொல்லினாலே சேவிப்பதுப்ரம்மமே
அவமாய்ப்போகாமல்நிதமே ஆசார்யவாக்யம்அவமாய்போகா
சிவமென்றால்மங்களமே ஸச்சித்ஸுகரூபமே [மல்நிதமே
மவுனபாவம்மதுவே மயங்காமலிருப்போமே (ஆசா)

6. விஷ்ணுவென்றசொல்லாலே வ்யாபகமதினர்த்தம்
வைஷ்ணவஸம்பந்தம்விதத்தம் வைகுண்டமானவைஷ்ணவசம்
[பந்தம்விதத்தம்
த்ஷ்ருஷ்ணையற்றிருக்கின்ற கைவஸம்பத்தேநித்யம்
உஷ்ணமில்லாமலொன்று யொளிர்வதேஜீவன்முக்தம் (ஆசா)

7. துர்மதங்கள் கண்டித்துத் தேசிகமூர்த்திநின்றார் [க்தார்
ஷண்மதங்களைஸ்தாபித்தார் சீக்கிரமாகஷண்மதங்களைஸ்தாபி
தன்மயமாகத்தானே சகலத்திலும்நிலைத்தார்
பன்மையான ஜகத்தைப்பாராமலேயொழித்தார் (ஆசா)

## ஸர்வஜ்ஞபீடமேற காஸ்மீரத்தையடைதல்.

---

விருத்தம் 78

ஷண்மதங்கள் ஸ்தாபித்த சங்கரமூர்த்திதானும்
தன்மயமாய்க்களித்து ஸர்வஜ்ஞரான ஆசான்
சின்மயஉருவத்தோடே திரிந்துகாஸ்மீரதேசம்
தன்னையுமடைந்தாரப் போஸர்வஜ்ஞபீடமேற

தரு—இராகம்-ஆனந்தக்களிப்பு. 77

பல்லவி.

சங்கரர்சர்வஜ்ஞராக அந்தத்துங்கஞானமான
ஸ்வரூபமாய்ப்போக சங்கரர்சர்வஜ்ஞராக

சரணங்கள்.

1. துர்மதகண்டனம் செய்தார் பின்பு
தன்மையாகவே சந்ததம் நின்றார்.
ஷண்மதஸ்தாபனம்செய்தார்மேலே
சின்மயமாகவே சலியாமலிருந்தார் (சங்கரர்)

2. ஹிமஸேதுபரியந்தம் திரிந்தார் அவர்
தமதத்வைதமதத்தை ஸ்தாபனம்செய்தார்

மமதையகந்தைகளை யழித்தார்பின்பு
அமனஸ்கபாவத்தை யப்பவேயடைந்தார் (சங்கரர்)

3. ஸர்வஜ்ஞபீடத்திலேற அவர்
துர்வாசமேசத்தைத் துரத்தியே ஆர
கர்வங்கள்ஞானத்தால்தீர பின்பு
நிர்விகாரமாக நின்றிளைப்பார (சங்கரர்)

4. பரபரப்புற்றவருகப் பின்பு பரப்ரம்மஸ்வ
ரூபமாய் ப்ரதிக்சற் றுப்போக
தரணியெங்குந்தனதாக அவர்
சரணமேகதியென்றுஜகத்துளோர்சேர்க (சங்கரர்)

5. சாரதாபீடத்தைக்கண்டார் அங்கே
தீராமயல்கொண்டு சீக்கிரம் நின்றார்
கூராமலேவாசல்விண்டார் பீடம்
யேரப்போகும்போது யிருப்பிடம் கண்டார் (சங்கரர்)

## ஸர்வஜ்ஞபீடத்திலேறி வாதிகளை ஜயித்தல்.

---

விருத்தம். 79

ஸர்வஜ்ஞபீடந்தன்னில் சடிதியாயாசானேறி
நிர்விகாரப்தானுக நிற்கின்றபோதுஅங்கே
தர்வைரியானதுஷ்ட மதங்களும் வெரட்டஆசான்
ஸர்வஜ்ஞத்தன்மையாமே ஸகலர்க்கும் விடைதந்தாரே.

தரு, இராகம்,காபி-76

பல்லவி.

வாரும் வாருமையா விடையைத்
தாரும் தாருமெய்யாய்.

அனுபல்லவி.

கூருங்கூருஞ்சுத்தக் கொள்கைமுழுதால் வென்றால்
சேருஞ்சேரும்பின்பு ஸர்வஜ்ஞபீடம்நன்றாய் (வாரும்)

சரணங்கள்.

1. தேகமில்லாமல்வேறே யாத்மா தேடிபார்த்தாலும்காணம்
ஆகையினாலேநீரும் அதற்குத்தரம்சொல்லனும்
ஏகமேயாத்மாவென்று யெடுத்தெங்கட்குரைக்கணம் (வா)

2. தேகமேயாத்மாவானால் சுழுப்தியிலே தெரிந்து சொல்லணும்
ஆகையினாலேயது யாத்மாவல்லாமல்போனால் [தானும்
ஐக்கமில்லாத உங்கள் உரையும் பெசகதானால் (வாரும்)

3. ப்ராணனேயாத்மாவல்லென்று அதையுமிப்போபகர்ந்திவெ
வீணிலேயலைந்து விடுகிறீர் அதைநேரே [திடம் நீரே
காணும் படிக்கிச்சொன்னால் கருணையுடனேவேறே (வாரும்)

4. ப்ராணனே யாத்மாவானால்சுழுப்தியிலே பார்க்கவேண்டுமதா
வீணது வாகுமல்லால் விளக்கமில்லாதினாலே [மேலே
காணுமாத்மா அறிவேகண்டுகொள்ளுமிப்பாலே (வாரும்)

5. மனமேயாத்மாவதாகும் அல்லாமல்போனால் மற்றெது ஆத்மா
[வாகும்
வினயத்துடனதனை விண்டுரைக்கிடலாகும்
அனவரதமெங்கட்கும் ஆகும் சந்தேகம்போகும் (வாரும்)

6. மனமதேயாத்மாவாகும் மென்று மதித்துச்சொன்ன உனது
[வார்த்தையுமோராது
மனது சுழுப்தியிலே மற்றொன்று மறியாது
தினதினமநுபவம் தீர்மானமாகுமிது (வாரும்)

7. புத்தியேயாத்மாவாகும் பொருளையெல்லாம் பூர்ணமாயறிவதி
[னால்
அத்தையாத்மாவன்றென்றால் அறிந்திடுவதெதினால்
இத்தையெடுத்துரையும் எங்களுக்கதினால் (வாரும்)

8. புத்தியேயாத்மாவென்று நீ புலம்புகின்றதத்தனையும் பொய்யா
வ்யர்த்தமாகக்ஷணத்தில் விளங்கிமறைந்திடுமே [குமே
உத்தரிந்தால் நித்ரையில் ஒழிந்துபோய் விடும்தாமே (வாரும்)

9. ஆனந்தரூப அஜ்ஞானம் ஆத்மாவேயாகும் அதுவல்லவென்று
ஆனந்தம் சுழுப்தியில் அனுபவமதுவுள்ளும் [நீர் சொல்லும்
தோற்றமனுபவத்தைத் துச்சமென்று நீர்சொல்லும் (வாரும்)

10. ஆனந்தமஜ்ஞானமென்று அறைந்தஉந்தன் அழகான வார்த்
தானதானதுநிற்கும் ஸச்சித்சுகமே பாரு [தையும் நேரு
ஈனமான அஜ்ஞானம் ஏதென்று சங்கை தீரு (வாரும்)

11. ஸச்சிதானந்தகனமாய் ஸர்வத்திலந்த சாச்வதப்பொருளிருக்க
துச்சமாகவேயென்றும் தோன்றுமஜ்ஞானம் திக்கம்
மிச்சமாகிய ஆத்மா மூலமாகயிருக்க (வாரும்)

12. இப்படி வாதிகளெல்லாமெடுத்தெரிந்து இஷ்டமாயெல்லோரு
சிற்பரவடிவான தேவியை ஸ்துதிசெய்ய [மும்ப
அப்பொழுதேமுயன்றார் அத்வைதமழைபெய்ய (வாரும்)

## ஆசார்யர்செய்யும் சாரதாஸ்தோத்திரம்.

விருத்தம். 80

ஸச்சிதானந்தமாயும் சாச்வதமாயுமுள்ள
மிச்சமாம்வஸ்து வொன்றே மூலகாரண மதாயும்
யிஜ்ஜகமனைத்தும் தோன்ற யிருக்கின்ற சக்தி நீயே
துச்சமாம விசாரம் செய்தால் துலங்கிடும்வஸ்து வொன்றே.

தரு இராகம் செஞ்சுருட்டி, 79

பல்லவி.

ஸச்சிதானந்தஸ்வரூபிஸகலத்திலும்ரூபி
ஸச்சிதானந்தஸ்வரூபி

அனுபல்லவி

மிச்சமானபொருளந்த மூலகாரணியிந்த (ஸச்சிதா)

சரணங்கள்.

1. ஸத்வரஜஸ்தமஸாசத் தானேயெங்கும் வியாபித்துத்
தத்வமகங்காரமாகச் சந்ததம் பரிணமித்து (ஸச்சி)

2. காரணப்ரபஞ்சமாயும் களிப்புடனே விளங்கிக்
காரணபூதம்மாய்த்தானே காணும்படியாய்த் துலங்கி (ஸச்சி)

3. ஸூக்ஷ்மஜகம்மதாயும் சடிதியிலே தானாகி
ஸாக்ஷியின்ப்ரதிபலனம் தெரியும்படியதாகி (ஸச்சி)

4. சித்தினோடேயாபாஸத்தை செரிபாய் முன்னிட்டுக்கொண்டு
சுத்தசத்வவடிவாகித் தலைத்து அஜ்ஞானம் விண்டு (ஸச்சி)

5. பதினேழுக்கிரியமாகப் பரிணாமத்தையடைந்து
அது சூக்ஷ்மதேகமென்று யாரும்ப்ரமையடைந்து (ஸச்சி)

6. ஸ்தூல பூதமாகப்பின்னும் தோன்றியேபஞ்சீகரித்து
நாலுவிதம் மாகச் சொல்லி நடிக்கும் சரீரம்சேர்த்து (ஸச்சி)

7. அதிலே பேதப்ராந்தி யாகிப்பந்தம் வந்து
விதிநிஷேதப்பிராந்தியில் விழுந்து நிதம் திரிந்து (ஸச்சி)

8. இப்படியனந்தகல்பம் இருக்கின்றவேளையிலே
தப்புவற்காகவொரு தலைவன் முயற்சியாலே (ஸச்சி)

9. நிஷ்காம கர்மஞ்செய்து நின்றிடும் சமயத்தில்
அஷ்கர்மம் விலகிப்போய் சுத்தியுண்டாம் சித்தத்தில் (ஸச்சி)

10. நிர்மலாந்தக் கரணத்தில் நித்யம் செய்யும் த்யானத்தால்
கர்மவினைதானே யொத்துக் காணும் சாதனமத்தால் (ஸச்சி)

11. நித்தியவஸ்துவின்னதென்றும் அநித்யமின்னதென்றும்
ஸத்யமாகதெரிந்திடும் சடிதியாகவேயென்றும் (ஸச்சி)

12. இகத்திலும் பரத்திலும் ஏராளமாய் வைராக்யம்
அகத்திலேயுதித்திடும் அப்போதே ஸன்னியஸிக்கும் (ஸச்சி)

13. சமதமம்முதலான ஷட்வித அங்கமும் கூடி
மமதையகங்காரத்தை மாற்றும் படிக்கிநாடி (ஸச்சி)

14. மோக்ஷயிச்சையுண்டாகி முழுதும் துறந்துவிட்டு
ஸாக்ஷியாக ஆத்மாவைக் காணவும் முறையிட்டு (ஸச்சி)

15. தேடி ஜகங்களெல்லாம் தேசிக மூர்த்திதன்னை
ஓடிவந்தோரிடத்தில் உருவாய்க் கண்டதுபின்னை ஸச்சி

16 ஈசனிவ்வுருகொண்டு யிஷ்டமாய் வந்தவரென்று
மாசற்றவர்பாதத்தை மகிழ்ந்து பணிந்துநின்று ஸச்சி

17. இருகரங்களைக்கூப்பி இஷ்டமுடன் துதித்து
பிரவிக்கடல் கடத்தும் பெருமானென்றுகளித்து ஸச்சி

18. ஆப்தமுதலாய்ச்சொல்லும் அந்த சிச்ரூஷை நாலும்
கோப்யமாகவேசெய்து கொண்டிருந்தாலக்காலும் ஸச்சி

19. ஆசான்க்ருபையினாலே யழைத்துக்கிட்டயிருத்தி
பேதாத மந்த்ரம்தன்னை போதனை செய்ததத்தில் ஸச்சி

20. அர்த்தவிசாரத்தாலே அத்தனையும் நேதித்து
சுத்தப்ரம்மமாகவே துணிந்து நிற்கபோதித்து ஸச்சி

21. ஸ்தூலசூக்ஷ்மஜகத்தைத் தோனலென்று அறிந்து
மூல அஞ்ஞானத்தையும முழுப்பொய்யதாகத்தேர்ந்து ஸச்சி

22. அபிமானிபேதங்களை யடியுடனேதுறந்து
விபுவான ஸாக்ஷிதானாய் விளங்கும்படியறிந்து ஸச்சி

23. ஸர்வஞ்ஞத்வமுதலாய் சாற்றுமீச்வரதர்மம்
நிர்விகாரத்தில் தோற்றி நிற்கும்மாயையின்தர்மம் ஸச்சி

24. அதினாலே ஸர்வஜ்ஞத்வம் அற்பமுமில்லையென்று
நிசமுமறிந்துகொண்டு நிர்விகாரமாய்நின்று ஸச்சி

25. ஸாக்ஷிப்ரம்மம் மென்றிடும் ஸகலபேதமும்விட்டு
காக்ஷியுடன் காண்பானைக் கலங்கமில்லாமல்விட்டு ஸச்சி

26. நிர்குணஸ்வரூபமாய் நிற்கின்ற ஸமயத்தில்
அர்க்கனில் ஒளிபோலே ஆய்விடுவாய் நிஜத்தில் ஸச்சி

27. அதிஷ்டான ரூபம்மன்றி அங்கொரு பேதமில்லை
அதினாலே நீயுமந்த அதிஷ்டானம் விட்டும் மில்லை ஸச்சி

28. இவ்விதமுறைசெய்த யீசனெதிரில்வந்து
திவ்வியவுருவுடன் செப்பினர்க்ருடம்தந்து ஸச்சி

29. நீரே ஸர்வஜ்ஞரிந்த நிகிலமுழுதும்தம்மை
மாராமல் மதிக்கட்டும் மண்ணுள்ளமட்டுமும்மை ஸச்சி

30. நீர்நினைத்தபோதெல்லாம் நேரில்வருவேனென்று
தீர்மானத்துடன்சொல்லி ஜகத்குருவாவீரென்று ஸச்சி

31. தன்னுடைய பிம்பத்திலே சடிதியாக மறைந்தாள் [ஸச்சி
பின்னும் யதிச்ரேஷ்டரும் புகழ்ந்துஸ்தோத்திரம் செய்தார்

## தேவர்கள்வந்து சங்கரரை ஸ்தோத்திரம் செய்தல்.

விருத்தம். 81

இப்படி யத்வைதத்தை யிருத்தியே உலகமெங்கும்
தப்பின்றி வாழும் நாளில் ஸகலதேவருமாய் வந்து
ஒப்பில்லா உந்தன்கார்யம் ஒன்றுமேயில்லைபின்னும்
அற்புதமென்றுசொல்லி அவர்கள் பூமாரி பெய்தார்.

தரு, இராகம், சுருட்டி 80

பல்லவி.

சரணம் சங்கரா யிங்கே கருணைதங்கவா

அனுபல்லவி

மரணபயத்தை ஹரணமாக்கியே
அருணனைப்போலே கருணைநோக்கியே.

சரணங்கள்

1. கோடிச்ருதியினால் உம்மைக் கூறமுடியுமோ
தேடித்தேடித்திரிந்துபார்த்தாலும்
யீடதாகவே யிங்கிருக்குமோ. (சரணம்)

2. தேவர்ஸ்துதிசெய்து பின்பு திவ்யப்பூக்கொய்து
ஆவலுடனே அடியிலர்ச்சித்து
வாயாலஸ்துதித்து வருஷம்போல்பெய்தார் (சரணம்)

3. ஆசான்மகிழ்ச்சியா யவ்விடத்தில் ஆலோசனைசெய்தார்
   லேசாகவந்தகார்யம் முடித்தார்
   கூசாமலங்கேகுதித்துப்பின் சென்றார். (சரணம்)

4. பதரிவனந்தன்னையாசான் பரிவுடனடைந்தார்
   சிதறிப்போகாமல்சிஷ்யர்கள் வந்தார்
   அதுகண்டுஆசானவிடம்நிலைத்தார் (சரணம்)

## பதரிகாச்ரமத்தில் மடம் கட்டி தோடகரைவைத்தல்.

---

விருத்தம் 32

பதரிகாச்ரமத்திலாசான் பரிவோடோர்மடமும் கட்டி
பதாரதமதோடகப்பேர்பற்றிய சிஷ்யன்தன்னை
சதமாகயிருக்கச்செய்து சம்பரதாயாதிபெல்லாம்
பதனமாயெல்லவர்க்கும் பகுத்திட்டாரங்குநின்று

தரு—இராகம், தோடி.

கண்ணிகள்.

1. பதரிவனத்தில்பரிவுடனாசான் பார்த்தொருமடங்கட்டினார்
   சிதறிப்போகாமல் சிஷ்யவர்க்கத்தைச் சீக்கிர மதில்வைத்திட்[டார்.

2. தோடகநாமத்தாலேதுலங்கும் தூயசிஷ்யனையிருத்தினார்
   நாடகமிந்தஜகமென்றவரும் நற்குருபாதம்போற்றி[னார்

3. வெகுதினமிங்கேவஸித்திம்மாசான்விளக்கமாயொன்றுமெண்ணி
   பகுத்துசிஷ்யரைப்பார்முழுதுக்கும் பரிவுடனாசானாக்கினார்.

4. நாலுதிக்குக்கும்நாலுசிஷ்யரை நன்மையாகவேயிருத்தினார்
   நாலுக்ஷேத்ரமும் நாலுமடமும் நாலுதைவமுண்டாக்கினார்

5. நாலுசக்தியும்நாலுதீர்த்தமும் நாலுவனமும்கற்பித்தார்
   நாலுவேதமும்நாலுவாக்யமும் நாலாசாரத்தைக்கற்பித்தார்

6. நாலுபேருடன்நாலுசிஷ்யரை நாலுதிக்குக்கும்வைத்திட்டார்
   கோலாகாலமாயாசார்யரிப்போ குவலயமெங்கும்வ்யாபித்தார்

அதில் தக்ஷிண திக்கிலுள்ளதைச் சொல்லப்படுகின்றது.

---

விருத்தம். 83

பதரிகாச்ரமத்திலாசான் பரிவுடனின்றுகொண்டு
ஹிதம்செய்யவுலகுக்கெல்லாம் மெண்ணிமெய்பருளினாலே
சதமாகதக்ஷிணத்தைச் சார்ந்திடுமடத்திற்குள்ள
விதமெல்லாம்விபரமாக விளம்பிடப்படுமிப்போது

தரு—இராகம், கானடா. 82

கண்ணிகள்.

1. தக்ஷிணதேசத்தில் ஸ்ரீங்கேரிக்ஷேத்ரத்தில்
 சாரதாமடமுமது.
 அக்ஷணம்மலஹானிகரலிங்கம் விபண்டரால்
 அழகாகபூஜை செய்தது

2. யாதொருரிஷ்யஸ்ரீங்கர் தவம்செய்துமகத்வத்தை
 அடைந்த ஆச்ரமமதுவாம்.
 தீதொன்றுமறவாதவாராமேராகதேவனு
 லேராமக்ஷேத்ரமதுவேயாம்

3. துங்கபத்ரையென்றிடும் தீர்த்த நாமத்துடனே
 துலங்கிடும் க்ஷேத்ரம் மதிலே
 தங்குதடையில்லாத சாரதாசக்தியென்று
 சாற்றிடுவாரதிலே

4. சைதன்யப்ரம்மச்சாரி யென்றொருநாமமங்கே
 சார்ந்திடுமாசார்யருக்கும்
 செய்தவார்த்திகமுதல்சிலக்ரந்தம்ப்ரம்மன்தானே
 ஸுரேஸ்வரப்பேர்வகிக்கும்

5. ஸரஸ்வதிபுரியென்றும் பாரத்யாரண்யமென்றும்
 பாரதிதீர்த்தமெனவும்
 ஸரஸ்வதிகிரியென்றும் ஸரஸ்வத்யாச்ரமமென்றும்
 ஸர்வநாமங்களதுவாம்

6. பூரிவாளமென்ஒருரு சம்ப்ரதாயத்துடனே
பகழ்ந்தெஜுர்வேதமும் சொல்லும்
ஆரியாவருக்கு அஹம்ப்ரம்மமஸ்மியதென்ற
அந்தவாக்யத்தையும் சொல்லும்.

7. ஹேரம்பரத்னகர்ப்பமென்ற கணபதியை
யிஷ்டமுடனே கொடுத்து
சாரதாம்பாளுடனே சந்தரமௌளீச்வரரை
சந்ததம்பூஜிக்க வைத்து

8. இப்படிதெற்குதிக்கில் இசைத்திடுமாசார்யர்க்கு
இவையெல்லாம் வகுத்துவைத்தார்
அப்படியேயவரும் அழகாய்தக்ஷிணதிக்கை
ஆண்டுபாலனும்செய்தார்.

## பூர்வதிக்கிலுள்ளதைச் சொல்லப்படுகின்றது.

விருத்தம். 84

பூர்வபாகத்திலுள்ள புண்ணியக்ஷேத்ரமான
சீர்வளர்ஜகன்னாதத்தில் விசித்ரமாயிருக்குமந்த
ஊர்வளம்க்ஷேத்ர மாதிவுரைத்திட்டலக்ஷணங்கள்
சேர்வின்றிசொல்லலாகும் தோன்றியமட்டும்தானே

தரு, இராகம் ஸாவேரி. 83

பல்லவி.

பூர்வபாகத்திலுள்ள புண்ணியக்ஷேத்திரத்தில்
சீர்வளர்ந்திடு மந்த ஜகன்னாதத்தில்,

அனுபல்லவி.

பேர்விளங்கிடுமாசான் ப்ரம்மநிஷ்டையினாலே
ஊர்வளம்தீர்த்தம் க்ஷேத்ரம்ஒப்பியே யதனைத்தாலே பூர்வ

சரணங்கள்

1. கிழக்குதிக்கிலேயுள்ள கீர்த்திவிளங்கவந்த
செழிப்புள்ளதானசகராதம்மந்த

யிழிவற்றக்ஷேத்ரம்மாகும் இதில்வஸித்திடுமந்த
அழிவற்றஆசார்யர்க்கு ஹஸ்தாமலகர்முந்த (பூர்வம)

2. பரகாசப்ரம்மச்சாரியென்றே பேசுவர்க்யாதியாக
அகாதமஹோததியத்தீர்த்தமாக
மகாகீர்த்தியையடைந்தமடம்கோவர்த்தனமாக
பகவான்புருஷோத்தமனே பாரில்ஜகநாதனுக (பூர்வம)

3. போகவாளமாகவே புகழும்சம்ப்ரதாயமும்
ஆகுமவ்வாரண்யத்தில் அவவனமும்
தாகமாய்நாடும்சக்தி விமலாதேவியதாகும்
ஏகமாயத்வைதத்தை யிசைக்குமரிக்வேதமாகும் (பூர்வ)

4. ப்ரக்ஞானம்ப்ரம்மமென்று புகலும்வாக்யமதற்கு
அஜ்ஞானமுதலெல்லாம் அகற்றிநிற்கும
வ்யாக்யானஸாரமெல்லாம் சொல்லியேயவருக்கும்
விஜ்ஞானகனமாக வாழ்ந்துஅவரிருக்கும். (பூர்வ)

5. ஆசானுரைத்தபடி ஹஸ்தாமலகர்தானும்
வாசாமகோசரம்மாய் வாழ்ந்தவரும்
ஆசார்யராகியங்கே யமர்ந்திருந்தாரவரும்
லேசாகயிஜ்ஜகத்தை ரக்ஷித்துக்கொண்டவரும். (பூர்வ)

மேற்குதிக்கிலுள்ளதைச் சொல்லப்படுகின்றது.

---

விருத்தம்.

பச்சிமபாகம்தன்னில் புகழ்த்வாரகாபுரத்தில்
அச்சமில்லாமல்வைத்த ஆசார்யர்பத்மபாதர்
உச்சமாயிருக்கும்போது உரைத்தனரவரைநோக்கி
மெச்சியக்ஷேத்ரமாதி முழுதையும் வகுத்திட்டாரே.

தரு, இராகம், சஹானு 84

பல்லவி.

மேற்குதிக்குபாகத்தில் முன்கட்டியமடத்தில் [யாத்ருடத்தில்
யார்க்குமறியத்ருடத்தில் அமைத்துவைத்தார் யார்க்குமறி

அநுபல்லவி,

சுதமானமோக்ஷத்தை ஜகத்தில்வியாபிக்கச்செய்து
ஒறிதம்தங்துவுலகத்துக் கேகரலமாயுய்து. (பதரி)

சரணங்கள்.

1. நாலுதிக்கிலும்க்யாதி நன்றாகப்பரவிட
மேலொன்றுமில்லாமல் முடிந்துகார்யமாய்விட
கோலாகாலமாயாசான் கூடிசிஷ்யர்முன்னிட
காலம்சென்றதறிந்து காணவெல்லோருங்கூட. (பதரி)

2. ஏராளமாகவேஹிமகிரிபார்சுவத்தில்
தாராளமாய்ப்பணி தங்கிடுமவிடத்தில்
பேராகப்பண்ணிய பெருமுஷ்ணகுண்டத்தில்
சீராகசிஷ்யர்கள் சிலகாலம் வஸித்தத்தில் (பதரி)

3. இவர்சிஷ்யருடன்கூடி யிருக்கின்றசமயத்தில்
தவம்செய்யும்தத்தாத்ரேயர் சார்ந்தாரவரிடத்தில்
தவராஜயோகம்பெற்றுத் திரியுமிவரிடத்தில்
கவனமாய்பாஷ்யார்த்தத்தைக் கேட்டாரவரிடத்தில் (பதரி)

4. இருவருந்துகையிலே யிருந்துபேசும் பொழுது
ஹரிப்பிரம்மாமுதலான அனைவருமப்பொழுது
பரமேச்வரரைப்பார்த்து பண்ணும்ஸ்துதிக்கிஅது
உருவத்தோடிருப்பதால் ஒன்றானபொருளிது (பதரி)

## ப்ரம்மாதிதேவாகள் ஸ்துதிக்கின்றார்கள்.

---

விருத்தம், 88

கங்கையைச்சடையில்தாங்கிச் சந்திரகளைதரித்தும்
மங்களருபத்தோடும் மன்மததகனம் செய்தும்
பொங்கிமுப்புரமெரித்தும் பெண்ணொருபாதிவைத்தும்
சங்கரப்பேர்வகித்த ஸ்வாமிமுக்கண்ணனீரே

தரு-இராகம், குருஞ்சி. 87

கண்ணிகள்

1. சந்த்ரகலையும் சடையில்கங்கையும் தரித்தவர்நீரே யங்கே
வந்தமன்மதன்தன்னையெரித்து வாழ்பவர்நீரே

2. முப்புரத்தையும் மூலஹானியாய் முடித்தவர்நீரே பின்பு
ஸ்வப்ரகாசமாய்த்துலங்கிடும் நல்லஜோதியும்நீரே

3. பாதிதேகத்தில்பெண்ணையும் வைத்தபரமனும்நீரே யந்த
ஆதிகாலத்திலஸுரன்தொடர அலைந்தவர்நீரே

4. மானும்மழுவுந்தரித்துநின்றிட்ட மஹாதேவர்நீரே அங்கே
ஆனந்தமாகநடனமடிக்கும் அப்பனும் நீரே

5. நீலகண்டமும்நெற்றிக்கண்ணுடன் நின்றவர்நீரே பணி
மாலையுடனேபூஷணம்மாக்கி மகிழ்பவர்நீரே

6. வியாக்ரசர்மம்விபூதிருத்ராக்ஷம் விளங்கிடும்நீரே அந்த
ஜாக்ரஸ்வப்னஸுஷுப்திமூன்றுக்கும் சாக்ஷியும் நீரே

7. யானையுரித்து அன்றுபோற்றிய அப்பனும் நீரே முன்னைக்
மௌனமாகவேமொழிந்தபதேசம் முனிவர்க்கும் நீரே

8. தில்லைவனத்தில்தித்தியென்றுடும் தேவனும்நீரே முன்னே
கல்லுக்களிர்க்குக்கரும்பை யீய்ந்திடும் காரணர்நீரே

9. பதஞ்சலிமுனிபார்க்கநர்த்தனம் பண்ணிடும்நீரே பக்தர்
கிதம்செய்யவேண்டியில்வுருவத்தை யெடுத்தவர் நீரே

10. நிர்விகாரமதாக விளங்கும் நிற்குணம் நீரே பின்பு
ஸர்வஜ்ஞராகஜகத்தில் துலங்கும் சங்கரர் நீரே

11. வந்தகாரியம்பூர்ணமாச்சுது வரவேண்டும் நீரே அங்கே
சிந்தைகளித்து சீக்கிரம்க்ருபை செய்திடும் நீரே

12. இப்படிதேவர்யாவருங்கூடி யிஷ்டமாய்த்துதிக்க அப்போ
சிற்பரவடிவான சங்கரர் தானுமேகளிக்க

13. சார்யமார்ச்சுதுகடிகிவருவோம் கவலையைத்தீரும் என்று
ஸூர்யரூபம்போல்துலங்கிடுமாசான் சொல்லவேயாரும்

14. பார்த்திருக்கவேபரிவுடன்னந்தி பாரில் வருகவே அப்போ
மூர்த்திரூபத்தைமரைத்து ஆசானும் முன்போலிருக்கவே.

## ஆசார்யர் நந்தியிலேரி கைலாஸகமனம்.

விருத்தம். 89

இந்துருமறைத்துவிட்டு யிலங்கவேமுன்போலாசான்
சந்திரக்கலையும் கங்கைதரித்திட்ட சடையுமாக
முந்தொருகாலம் தன்னில் முப்புரமெரித்த போது
மந்தகாஸித்தாப்போலே மதம்வென்றுமகிழ்ந்திட்டாரே.

தரு-இராகம் தர்பார். 88

பல்லவி.

நந்தியின்மேலேயேரியே ஆசானுமிப்போ
மந்தகாசமாயாரியே.

அனுபல்லவி.

இந்த்ராதிதேவரெல்லாம் மேற்றித்துதிக்கக்கர்த்தன்
சந்த்தரக்கலையுடனே தெரிசனந்தந்தார் முக்தன் (நந்தியின்)

சரணங்கள்.

1. மானும்மழுவும் தரித்து மன்மதன்செற்ற
ஞானக்கண்ணையும் விழித்து
ஹீனமில்லாமலிட பாகத்தில்பெண்ணைவைத்து
ஆனந்தகரமாக அய்யனுமேகளித்து (நந்தியின்)

2. தும்புருநாரதருடன் சுத்தஞானிகள்
தம்பூருநாதமத்துடன்
அன்பாய்ஸ்துதிக்கஹரன் ஆனந்தமாகம்ருடன்
இன்பமாத்திரமாக யெல்லோருக்கும் மாடும்நடன்

3. சென்றார் கைலாசம் தன்னிலே சங்கரநாமம்
நன்றாய்விளங்கப்பாரிலே
அன்றுமின்றுமொன்றான ஆனந்தகனத்திலே
என்றுமிருந்தாரவ ரிடமற்ற ஸுகத்திலே (நந்தி)

4. ஸச்சிதானந்தகனமே ஸகலர்பார்க்க
அச்சமில்லாமல்தினமே
இச்சகம்தன்னில்வந்து யெக்கார்யங்களும் தாமே
மிச்சமின்றி முடித்து மூலமாகவே போமே(நந்தி)

## சங்கரர் முப்பத்திமூன்றும் தலைக்கட்டில் திரும்பிவந்து செய்ததைச்சொல்லுதல்.

---

விருத்தம். 90

சங்கரபகவத்பாதர் திரும்பிமுப்பத்திமூன்றில்
மங்களரூபத்தோடே மகிழ்ச்சியாயவதரித்து
துங்கஞானத்தினாலே சொன்னகாலடிக்ஷேத்ரத்தில்
பொங்கிலைத்குரு பீடத்தைப் போட்டார்சாரதையுடன்றான்

தரு—இராகம் சங்கராபரணம். 89

பல்லவி.

சங்கரபகவத்தார் திரும்பிவந்து
சேர்வைகொடுத்தார் யாவர்க்கும்

அனுபல்லவி.

ஸ்ரீங்ககிரியில்முன்பு சிறப்பாய்ப்போட்ட பீடம்போல்
இங்குகாலடிதன்னில் இஷ்டமாய் போட்டாரன்பால்(சங்கர)

சரணங்கள்.

1. தர்மதங்கள்முழுதும் துறந்திபடித்தாபிவர்
நிர்மலமனதுடன் நிற்கவைத்திட்டார்அவர்
ஸன்மார்க்கமாயிருக்க ஸகலர்க்கும்விடைதந்தார்
தன்மாத்திரமாகவே ஸந்ததமுமிருந்தார். (சங்கர)

2. வந்தஜனங்களுக்கு வரிசையுடனேசேர்வை
தந்தவர்தயவோடே செய்தனர்க்ருபாபார்வை
யெந்தவேளையும்வைத்து யிஷ்டமுடனேதீர்வை
யிந்ததெரிசனமே யென்றனர்ஸுகாத்மாவை. (சங்கரர்)

3. எல்லார்க்கும்சேர்வைதந்து யிஷ்டமுடனிருக்க
பொல்லாதமனப்பேய்கள் போயாரும்ஸுகிக்க
உல்லாஸமாகத்தானே உத்தமர்க்ருபைவைக்க
நில்லாயலோடமாயை நின்றூர்யாருங்களிக்க. (சங்கரர்)

4. ஸச்சிதானந்தசிவா பினவநரசிம்மராய்
இச்சகந்தன்னில்நிற்கும் யாரும்மறியநேராய்
துச்சவிஷயங்களை துறந்துஸுகிக்கவேராய்
இச்சமயத்தில்வந்தார் இஷ்டமாயசர்க்கும்சீராய் (சங்க)

5. சாரதைகோவில்தன்னில் ஸர்வசிஷ்யருடனே
சீருடனேயிருந்து சாந்நிபாடமுடனே
கூறினூர்யாவர்க்கும் குருவுங்களிப்புடனே
ஸாரமாகக்ரகித்து ஸந்தோஷித்தாருடனே. (சங்கரர்)

## சங்கரர்செய்தகார்யங்களை சங்க்ரகமாய்த் துதித்தல்.

---

விருத்தம். 91

துர்மதங்களைகண்டித்துந் தூயமார்க்கத்தையிந்த
ஷண்மதஸ்தாபனத்தால் ஸகலர்க்குந்தெரியச்சொல்லி
தன்மயமாகத்தானே ஸர்வஜ்ஞபீடமேறிச்
சின்மயமாகினற சங்கரர்பாதம்போற்றும்.

தரு, இராகம்-தேசிகதோடி.

பல்லவி.

சங்கரானந்தகுருவை சந்ததமும்போற்றினேன்

அநுபல்லவி.

எங்கிலும்நிறைந்திருக்கும் துங்கஞானமேசெழிக்கும் (சங்)

சரணங்கள்.

1. துர்மதங்களைக்கண்டித்து ஷண்மதங்களை ஸ்தாபித்து
பன்மையானபேதமற்றுத் தன்மயமாகநிலைத்து. (சங்கரா)

2. ஸர்வஜ்ஞபீடத்திலேறி ஸர்வசாக்ஷியாகத்தேறி
கர்வங்கள்முழுதும்நீறி நிர்விகாரமாகஆறி. (சங்கரா)

3. ஸௌந்தரீயுருத்தரித்து வந்தசாரதையடுத்து
எந்தவேளையும்ஸ்துதித்து சிந்தனையெல்லாம்நெஜித்து. (சங்)

## மங்களம் பாடுகின்றது.

---

விருத்தம். 92

மங்களம்மதமனைத்தும் மகிழ்ச்சியாய்வென்றவர்க்கு
சங்கையில்லாமல்தானாய் தரணியில்நிற்பவர்க்கு
சங்கரநாமம்பெற்ற ஸத்குருநாதருக்கு
பொங்கிடும்பூர்ணனந்தப்ரம்மமாய் புகழ்பவர்க்கு

தரு—இராகம், பந்துவராளி.

பல்லவி.

சங்கரானந்த ஸ்வாமிக்கி ஜயமங்களம் ஷிஷ்யர்
சங்கைகளைதீர்த்தவர்க்கு சுபமங்களம்

விருத்தம். 83

அங்கைநெல்லிக்கனிபோலே அத்வைதமளித்தவர்க்கு
தங்குதடையற்றுத்தானே யிருப்பவர்கள்க்கு

சரணங்கள்.

1. துர்மதங்கள்முழுதையும் துறத்தியேவைத்தவர்க்கு
ஷண்மதத்தைஜகத்திலே ஸ்தாபித்தவர்க்கு
நிர்மலானந்தம்மாகவே நித்யமும்ஸௌகிப்பவர்க்கு
சின்மயாகாரம்மாயநின்ற ஸ்ரீகுருவுக்கு (சங்கரா)

2. ஸர்வஜ்ஞபீடத்திலேறித் தானாகயிருப்பவர்க்கு
நிர்விகாரஸ்வரூபமாய் நிலைத்தவர்க்கு
துர்வாதமேகத்தையெல்லாம் தூரத்தியடித்தவர்க்கு
கர்வமற்றுகனமாகக் களிப்பவர்க்கு (சங்கரா)

3. சுத்தப்ரம்மமயமாகத் துலங்கும்ஸ்வரூபருக்கு
நித்யப்ரம்மச்சார்யத்திலே நிலைத்தவர்க்கு
அத்வைதாகாரம்மாகவே அனவரதம்நிற்பவர்க்கு
ஸத்யஞானானந்தமான ஸத்குருவுக்கு (சங்கரா)

4. ஏராளமாகத்தானே ஏகமாய்த்திரிந்தவர்க்கு
ஸாராஸாரம் பிரித்துத் தந்தவர்க்கு
தாராளமாகத்தானே சிஷ்யவர்க்கங்களுக்கு
கூராமலர்த்தம் சொன்ன குருநாதர்க்கு (சங்கரா)

5. பத்துதிக்கிலும் கீர்த்தியைப் படைத்தபண்டிதருக்கு
வித்துவான்கள் புஜித்திடும் வ்யாபகருக்கு
சுத்தமாகபாஷ்யங்களைச் சொன்னஸ்ரீகுருவுக்கு
தத்வமஸ்யாதிவாக்யத்தால் தானேலக்ஷ்யருக்கு (சங்கரா)

6. நித்யசுத்தமுக்தஸத்ய நிர்விகாரரூபருக்கு
பத்தமுக்தியற்ற பரிபூரணருக்கு
எத்திக்கிக்கும் கீர்த்திவிளங்கியிருக்கின்ற ஸத்குருக்கு
பக்தபராதீனரான பகவானுக்கு (சங்கரான)

## ஸாதுக்கள் நமஸ்கார பூர்வகமாகக்ரந்தத்தை ஸமாப்தம் செய்தல்.

### விருத்தம். ௯௩

சங்கரவிஜயம்தன்னில் சாற்றியகதைகளெல்லாம்
அங்கையில்நெல்லிபோலே யாவரும் மறியத்தானே
இங்குரைசெய்தோமித்தையிஷ்டமாய் பெரியோரெல்லாம்
மங்களவாக்யமென்று மகிழ்ச்சியாய்கொள்ளல்வேண்டும்.

## குருநமஸ்காரம் செய்தல்.

---

விருத்தம் 94

சந்ததமாசானோடே சரித்திரச்சுருக்கம்தன்னை
ஸௌந்தரீயருளினாலே சொல்லினோமதனையெல்லாம்
சிந்தித்துத்யானத்தாலே தெளிவடைந்தவர்களெல்லாம்
வந்ததும்போனதற்ற வஸ்துவாய் வாழ்வார்மெய்யே.

ஸ்ரீகுருப்யோநம: ஹரி, ஓம். ஓம் ஓம்.



